

# அடிமை ஆவணங்கள்

## அ.கா. பெருமாள் (பி. 1947)

நாட்டார் வழக்காற்றியல் ஆய்வாளர். கிராமங்களில் சிதறிக் கிடக்கும் பன்முகத்தன்மை கொண்ட பண்பாட்டைச் சேகரித்து ஆராய்வது இவரது பணி. இவர் பதிப்பித்ததும் எழுதியதுமான நூல்கள் எண்பத்து மூன்று. தமிழக அரசின் சிறந்த நூலாசிரியர் விருதை ‘தென்னிந்தியத் தோல்பாவைக் கூத்து’ (2003), ‘தென்குமரியின் கதை’ (2004) ஆகிய நூல்களுக்காக இருமுறை பெற்றிருக்கிறார்.

இவரது முக்கியமான நூல்கள், ‘நாட்டார் நிகழ்த்துக் கலைக்களஞ்சியம்’ (2001), ‘தெய்வங்கள் முளைக்கும் நிலம்’ (2003), ‘ஆதிகேசவப் பெருமாள் ஆலயம்’ (2006), ‘தாணுமாலயன் ஆலயம்’ (2008), ‘இராமன் எத்தனை இராமனடி’ (2010), ‘வயல்காட்டு இசக்கி’ (2013), ‘முதலியார் ஓலைகள்’ (2016), ‘சீதையின் துக்கம் தமயந்தியின் ஆவேசம்’ (2018) ‘தமிழறிஞர்கள்’ (2018), ‘தமிழர் பண்பாடு’ (2018), ‘பூதமடம் நம்பூதிரி’ (2019) ஆகியன.

முகவரி : 471-53 *B* 2, ‘ரம்யா’,

கவிமணி நகர்

தெ.தி. இந்துக்கல்லூரி தெற்கு

நாகர்கோவில் 629 002

தொடர்புக்கு : 94420 77029

மின்னஞ்சல் : *perumalfolk@yahoo.com*

# ஆசிரியரின் பிற நூல்கள்

[காலச்சுவடு வெளியீடு]

நாட்டார் வழக்காற்றியல்

- சடங்கில் கரைந்த கலைகள் (2009)
- இராமன் எத்தனை இராமனடி (2010)
- அர்ச்சுனனின் தமிழ்க் காதலிகள் (2012)
- வயல்காட்டு இசக்கி (2015)
- முதலியார் ஓலைகள் (2016)
- சீதையின் துக்கம் தமயந்தியின் ஆவேசம் (2018)
- தமிழறிஞர்கள் (2018)
- பூதமடம் நம்பூதிரி (2019)

சமயம்

- சிவாலய ஓட்டம் (ஒரு பாதயாத்திரையின் ஆன்மிக வரலாறு) (2011)

பதிப்பு

- நாஞ்சில் நாட்டு மருமக்கள்வழி மான்மியம் - குறுங்காவியம் (கவிமணி), (2008)
- அய்யா வைகுண்டசாமி அருளிய அகிலத்திரட்டு அம்மானை, ஆன்மிகம் (சகாதேவன் சீடர் இரா. அரிகோபாலன்), (2009)

அ.கா. பெருமாள்

# அடிமை ஆவணங்கள்



காலச்சுவடு பதிப்பகம்

அடிமை ஆவணங்கள் ♦ மூலஆவண ஆய்வு ♦ ஆசிரியர்: அ.கா. பெருமாள் ♦ © அ.கா. பெருமாள் ♦ முதல் பதிப்பு: அக்டோபர் 2021 ♦ வெளியீடு: காலச்சுவடு பப்ளிகேஷன்ஸ் (பி) லிட்., 669, கே.பி. சாலை, நாகர்கோவில் 629001.

***aTimai aavaNankaL*** ♦ *Slavery-Original Documents* ♦ *Author: A.K. Perumal* ♦ *© A.K. Perumal* ♦ *Language: Tamil* ♦ *First Edition: October 2021*

*Published by Kalachuvadu Publications Pvt. Ltd., 669 K.P. Road, Nagercoil 629001, India* ♦ *Phone: 91-4652-278525* ♦ *e-mail: publications@kalachuvadu.com*

*ISBN: 978-93-91093-95-2*

எழுத்தாளர்
ஜெயமோகனுக்கும்
அருண்மொழிக்கும்

# பொருளடக்கம்


அறிமுகமும் நன்றியும்

முகவுரை

பறையடிமை ஏறுமுறி ஆவணம்

ம.ஆ. 561 வைகாசி 3 கி.பி. 1386

பறையடிமை விலைப்பிரமாணம்

ம.ஆ. 634 புரட்டாசி 14 கி.பி. 1459

பறையடிமை ஒற்றி ஓலை

ம.ஆ. 647 தை 2 கி.பி. 1472

பறையடிமை ஒற்றி ஓலை

ம.ஆ. 680 பங்குனி 4 கி.பி. 1505

தர்மப் பிரமாணம் கல்வெட்டு (அடிமை நிபந்தம்)

ம.ஆ. 854 தை 26 சகாத்தம் 1600 கி.பி. 1679

நில நிபந்தக் கல்வெட்டு (அடிமை நிபந்தம்)

ம.ஆ. 858 வைகாசி மாதம் 19
சகாத்தம் 1605 கி.பி. 1683

பறையடிமை விலையோலை

ம.ஆ. 973 சித்திரை 14 கி.பி. 1798

பறையடிமை விலையோலை

ம.ஆ. 973 சித்திரை 14 கி.பி. 1798

பறையடிமை விலையோலை

ம.ஆ. 1002 வியவருஷம் தை 2

சாலிவாகன சகாப்தம் 1749 கி.பி. 1827

பறையடிமை விலை ஓலை

ம.ஆ. 1007 மார்கழி 22 சனி,
சகாப்தம் 1753 கி.பி. 1832

உகந்துடைமைப் பிரமாணம் (பறை அடிமை கொண்டது)

ம.ஆ. 1036 கி.பி. 1861

பறையடிமை ஓலை

ஆண்டு இல்லை

வெள்ளாட்டி அடிமை ஓலை

ம.ஆ. 675 வைகாசி 19 வெள்ளிக்கிழமை கி.பி. 1500

வெள்ளாட்டி விலையோலைக் கரணம்

ம.ஆ. 886 ஆனி 30 கி.பி. 1711

வெள்ளாட்டி விலையோலைக் கரணம்

ம.ஆ. 905 புரட்டாசி மாதம் கி.பி. 1730

சீதன ஆவணம்

ம.ஆ. 606 வைகாசி (கி.பி. 1431)

சீதன ஓலை

ம.ஆ. 633 அய்ப்பசி 25 கி.பி. 1457

சீதன ஓலை

ஆண்டு இல்லை

சீதன ஓலை

ம.ஆ. 886 ஆனி 32 கி.பி. 1711

பின்னிணைப்பு

1. காளை ஒற்றி ஆவணம்

ம.ஆ. 651 பங்குனி (கி.பி. 1476)

2. சாம்பான் ஒற்றிக்கு நிலம் எடுத்த ஆவணம்

ம.ஆ. 637 அடி 10 (கி.பி 1462)

3. பள்ளர் நிலவுடைமையாளர்

ம.ஆ. 777 ஆவணி 22 (கி.பி. 1601)

4. பறையர் நாட்டின் சுமைதாங்கி

5 ஓண விழா சுமடு எடுத்தல்

ம.ஆ. 808 ஐப்பசி 7 (கி.பி. 1632)

6. நிபந்தம் சுமந்துவர வேண்டும்

ம.ஆ. 901 மாசி 21 (கி.பி. 1726)

7. அரசர் பிறந்த நாளுக்குப் பிராமணர்களுக்குச் சாப்பாடு

ம.ஆ. 902 புரட்டாசி 17 (கி.பி. 1727)

8 அரசரின் பிறந்த நாளுக்குப் பிராமணர்களுக்குச் சாப்பாடு

ஆண்டு இல்லை

9. ஓணநாளுக்குக் காய்கறிகள் சுமடு எடுத்தல்

ம.ஆ. 808 ஐப்பசி (கி.பி. 1632)

10. ஸ்ரீபலி மண்டபப் பணி அடிமை வேலை

ம.ஆ. 973 ஆனி 8 (கி.பி. 1798)

11. விசாரிப்புக்கார அடிமை

ம.ஆ. 973 தை 3 (கி.பி. 1798)

உதவிய நூற்கள்

கல்வெட்டுகள்

கதைப்பாடல்கள்

கையெழுத்துப் பிரதிகள்/ஏடுகள்

# அறிமுகமும் நன்றியும்

'அடிமை ஆவணங்கள்' என்ற இந்த நூல் தெக்கந் திருவிதாங்கூர் என்று கூறப்பட்ட இன்றைய கன்னியாகுமரி மாவட்டத்தில் கிடைத்த ஓலை ஆவணங்கள், கல்வெட்டுகள், கதைப்பாடல்கள் ஆகியவற்றின் அடிப்படையில் எழுதப்பட்டது. வேணாட்டின் கீழ் இருந்த தென்பாண்டிநாட்டுப் பகுதியில் உள்ள நிகழ்வுகளும் இதில் அடங்கும்.

நாஞ்சில் நாட்டு நிர்வாகத்துடனும் அரசன் தலைமையுடனும் ஏறத்தாழ ஆறு நூற்றாண்டுகள் தொடர்புடைய அழகியபாண்டியபுரம் முதலியார் வீட்டு ஆவணங்கள் முழுவதுமாக இன்னும் ஆராயப்படவில்லை. வரலாற்றுப் பேராசிரியர் கே.கே. பிள்ளை இதை 1943இல் எழுதியிருக்கிறார்.

நாஞ்சில் நாட்டு 12 பிடாகைகளின் நிர்வாகத் தொடர்பு இருந்ததாலும் வேணாடு, திருவிதாங்கூர் அரசர்களுடன் சுமுக உறவு இருந்ததாலும் இவர்களின் பாதுகாப்பில் பல ஆவணங்கள் இருந்தன. 1905 அளவில் கவிமணி தேசிக விநாயகம்பிள்ளை இந்த ஓலை ஆவணங்கள் பற்றித் திருவனந்தபுரத்தில் பேசியிருக்கிறார்.

முதலியார் வீட்டு ஓலை ஆவணங்களில் சிலவற்றைக் கவிமணி பெயர்த்தெழுதி ஆராய்ந்து ஒரு கட்டுரையைப் படித்த பின்பு திருவிதாங்கூர் தொல்லியல் அறிஞர்கள் விழித்துக்கொண்டனர். கவிமணியின் உதவியுடன் முதலியாரின் வீட்டிலிருந்து 600 ஓலை ஆவணங்களைத் திருவிதாங்கூர் தொல்லியல் துறையினர் பெற்றனர். இது 1920 – 24இல் நடந்திருக்கலாம்.

கவிமணி, இந்த ஆவணங்களில் இருநூற்றுக்கும் மேற்பட்ட ஓலைகளைப் பிரதிசெய்து வைத்திருந்தார். அவற்றில் 89 ஆவணங்களைத் 'தமிழினி' பதிப்பகம் வழியாகவும் (2006),67 ஆவணங்களைக் காலச்சுவடு பதிப்பகம் வழியாகவும் (2016) தொகுத்து வெளியிட்டேன். இந்த நூற்கள் இப்போது அச்சில் இல்லை.

கவிமணியின் கையெழுத்துப் பிரதிகளில் இன்னும் வெளிவராத

ஆவணங்கள் உள்ளன. அவை 1905–20ஆம் ஆண்டுகளில் பிரதி செய்யப்பட்டவை. மலையாள மொழியில் மலையாண்மை எழுத்தில் இருந்தவற்றை அவர் தமிழ்ப்படுத்தியிருக்கிறார்.

கவிமணியின் தாள்ப்பிரதி இன்று படிக்கும்படியாக இல்லை. இருபதாம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் வழக்கில் இருந்த கடுக்காய் மையும் வாழைக்காய் நிப்பும் வைத்து எழுதப்பட்ட இந்த ஆவணங்களின் தாள்ப்பிரதியில் உள்ள எழுத்துக்கள் மங்கவில்லை; ஆனால் தாளின் தன்மையால் படிக்க முடியவில்லை.

இந்நூலில் அடிமை மூல ஆவணங்கள் இருபதும் பின்னிணைப்பில் பதினொன்றும் ஆக முப்பத்தொரு ஆவணங்கள் உள்ளன. இவற்றில் கவிமணியின் கையெழுத்துப் பிரதியில் சுப்பிரமணிய பிள்ளை வீட்டில் உள்ள ஆவணங்கள் 8; Kerala Society Papers ஆய்விதழில் (1930) உள்ளவை 2; பத்மநாபபிள்ளை என்பவர் 1933இல் தொகுத்துக் கையெழுத்துப் பிரதியில் இருப்பதும் 1944இல் வெளியிட்டதுமாக 5, திருவிதாங்கூர்க் கல்வெட்டுத் தொகுதியில் (1930) உள்ளது ஒன்று, செந்தீ நடராசனும் இந்நூலாசிரியரும் கண்டுபிடித்த அச்சில் வராத குமாரகோவில் கல்வெட்டு ஒன்று என இவை உள்ளன. எஞ்சியவை 2006, 2016ஆம் ஆண்டுகளில் நூலாசிரியர் வெளியிட்ட நூற்களிலிருந்து எடுக்கப்பட்டவை.

திருவிதாங்கூரில் அடிமைமுறை இருந்தது என்றாலும் அதுபற்றிய செய்திகள் குறைவாகவே கிடைக்கின்றன என்கிறார்கள் கேரள அடிமை முறைபற்றி ஆராய்ந்த குசுமம், அடூர் ராமச்சந்திரன் ஆகியோர்.

ஆரம்பகாலத்தில் இந்தியாவில் அடிமைமுறை இல்லை என்பதைக் கிரேக்கத் தூதரான மெகஸ்தனிசின் தகவல் அடிப்படையில் இவர்கள் கூறுகின்றனர்.

தமிழகத்தில் பிற்காலச் சோழர் காலத்தில் அடிமைமுறை இருந்ததென்பதற்குப் பிற்காலச் சோழர்களின் கல்வெட்டுகளைச் சான்றாகக் கொள்ளுகின்றனர். ஸ்ரீதனமாக நிலமும் பொன்னும் பொருளும் கொடுக்கும்போது கூடவே அடிமையையும் கொடுக்க வேண்டும் என்ற வழக்கம் சோழர் காலத்தில் இருந்தது. வீட்டு உள்வேலைகளுக்காகவும் அடிமைப் பெண்களை வாங்கியிருக்கின்றனர்.

அடிமை ஒருவர், தன் எஜமானருக்கு வாழ்நாள் முழுக்க அடிமையாய் இருக்க வேண்டும் என்பது பொதுவிதி. இது வழிவழியடிமை; ஆதித்தனும் சந்திரனும் இருக்கும்வரை என்றெல்லாம் கல்வெட்டு ஓம்படைக்கிளவி போல் குறிப்பிடும் மரபு பொதுவானது. திருவிதாங்கூர் ஆவணங்களில் இதைக் 'குருபரம்பரையுடையோ'மாகவும் என்கின்றனர்.

கேரளம் மலபாரில் நிலச்சுவான்தார்களிடம் அடிமைகள் இருந்தனர். ஒருவகையில் விவசாயத் தொழில் செய்யவே புலையர், தீயர், பறையர், வேடர் போன்றோர் அடிமைகளாயினர். இவர்கள் தீண்டத்தகாதவர்கள் என்று முத்திரை குத்தப்பட்டதும் இன்னொரு காரணம் என்று W.S. Hunt என்ற பாதிரியார் Kerala Society Papers ஆய்விதழில் கூறுகிறார் (1930).

இந்தக் கருத்தை அப்படியே தென்திருவிதாங்கூருக்குப் பொருத்திப் பார்க்க முடியவில்லை. இங்கு கிடைத்த அடிமை ஆவணங்களில் அடிமைகளாகக் கூறப்பட்டவர்கள் எல்லாருமே பறையர் சாதியினர் மட்டுமே. இவர்களைப் போலவே தீண்டத்தகாதவராய் கருதப்பட்ட வேறு சாதியினர் அடிமை ஆகவில்லை; இதன் காரணம் புரியவில்லை.

கேரள அடிமைகளைப் பற்றிக் கிடைத்த செய்திகள் தமிழக அடிமைகளுக்கு முழுதுமாய்ப் பொருந்திவரவில்லை. தமிழக அடிமைகளுக்கு முத்திரை குத்துவதைப்போலத் தென் திருவிதாங்கூர் அடிமைகளுக்குக் குத்தப்பட்டதாகத் தகவல்கள் கிடைக்கவில்லை.

வேணாட்டு அரசன் அய்யன் அடிகள் திருவடிகள் என்பவரின் கல்வெட்டு அடிமைக்காசு என்ற நாணயத்தைக் கூறுகிறது. இதன்காலம் கி.பி. 849. இதனால் இக்காலத்திலேயே அடிமைமுறை ஆரம்பித்துவிட்டது என்கின்றனர். ஐரோப்பியர்கள் அடிமைகளைச் சகஜமாகவே வாங்கியிருக்கின்றனர். இந்த அடிமைகள் விவசாயக்கூலிகள் அல்லர் என்கிறார் அடூர் ராமச்சந்திரன்.

இந்நூலில் அடிமை ஆவணங்களின் மூலங்களைக் கொடுத்திருக்கிறேன். பொருத்தமான பின்னிணைப்புகளுக்கும் மூல ஆவணங்களைக் கொடுத்திருக்கிறேன். பழைய ஆவணங்கள் மட்டுமல்ல நாட்டார் வழக்காறுகளும் அடிமைமுறைகுறித்து அறிய பெரிய அளவில் உதவ முடியுமென்று இந்நூலின் முகவுரை

எழுதியபோது அறிந்துகொண்டேன்.

கதைப்பாடல்களில் அடிமை குறித்து நேரடிச் செய்திகள் வரவில்லை என்றாலும் ‘பறையர்கள்’ - அனைத்துச் சாதிகளாலும் ஒதுக்கப்பட்டதற்குச் சான்றுகள் உள்ளன. ஒடுக்கப்பட்டவர்களுடன் கொண்ட மண உறவு காரணமாகக் கொலைப்படுதல் சாதாரணமாய் நிகழ்ந்துள்ளது.

மிக அண்மைக்காலம்வரை கூலி விவசாயிகளில் பறையர், சாம்பவர் என்னும் இருசாதியினரும் தங்கள் எஜமானரை நாச்சியார், நைனார் என அழைத்திருக்கின்றனர். பெண் எஜமானிக்குரிய சொல் நாச்சியார்; அவர் சிறுபெண்ணாக இருந்தால் சின்ன நாச்சியார்; ஆண் எஜமானர் நைனார் எனப்பட்டனர். இதிலும் வயது குறைந்தவருக்குச் ‘சின்ன’ அடைமொழி சேரும். நாவிதர், ஆதிக்கசாதியினரைப் ‘போத்தி’ என அழைத்தனர். இதுபோன்ற வழக்காறுகள் தொகுக்கப்படவில்லை.



இந்நூலை எழுத ஆதர்சமாய் இருந்தவர் ஆ. சிவசுப்பிரமணியன் அவர்கள். அவரது ‘தமிழகத்தில் அடிமைமுறை’ என்ற நூல் எனக்கு உந்துதலாய் இருந்தது. இந்நூலில் தொகுக்கப்பட்டுள்ள மூல ஆவணங்களைப் பழைய தாள்பிரதியிலிருந்து படிக்க கல்வெட்டியல் ஆய்வாளர் செந்தீ நடராசன் உதவினார். தெ.தி. இந்துக்கல்லூரி தமிழ்த்துறைத் தலைவர் முனைவர் தெ.வே. ஜெகதீசன் அபூர்வமான நூற்களைப் பல்வேறு இடங்களிலிருந்து பெற்றுத்தந்தார்.

பத்து ஆண்டுகளுக்கு முன்பு எழுத்தாளர் ஜெயமோகனிடம் இந்த ஆவணங்களைப் பற்றிப் பேசியபோது எல்லாவற்றையும் தொகுத்துவிடுங்கள் ஒன்றாக வெளியிடலாம் என்றார்.

நான் மிகவும் மதிக்கின்ற மருத்துவர் சிறுநீரக அறுவைச் சிகிச்சை நிபுணர் டாக்டர் கவுதமன் தனி உரையாடலில் நிறைய விஷயங்களை விவாதித்தார். இந்தப் படிப்பாளியின் தந்தை சந்திரஹாசன் தமிழறிஞர்; சிந்தனையாளர். அவரின் தொடர்ச்சி இவரிடம் உண்டு. சில விஷயங்களை இவரிடம் விவாதித்தேன். இந்த நூலை படித்து முழுக்கவும் பிழைதிருத்தியவர் என் அருமை நண்பர் களந்தை பீர்முகம்மது.

# முகவுரை

தென்திருவிதாங்கூரின் சாதிய அடக்கு முறையின் ஒரு பகுதியாக இருந்த அடிமைமுறை பற்றி அறிவதாக இருந்தால் திருவிதாங்கூர் அரசர்களின் வைதீகச் சார்பு, கோவில் நிர்வாகத்தினர்களான யோகக்காரர்களின் மேலாதிக்கம், கோவிலுக்குச் சொந்தமான நன்செய், புன்செய் நிலங்களைக் குத்தகை எடுத்தவர்களின் ஆணவப்போக்கு போன்றவற்றையும் கணக்கில் கொள்ளுவது உண்மையைக் கண்டறிய உதவும்.

## ராணியின் அறிக்கை

திருவிதாங்கூர் அரசர்களின் சாதிய அணுகுமுறையைத் திருவிதாங்கூரின் கிழக்கிந்திய கம்பெனி பிரதிநிதிகளும் அனுசரித்துத்தான் போனார்கள். இந்திய முதல் விடுதலைப்போர் தோல்வியடைந்து இந்தியாவில் பிரிட்டிஷ் அரசு ஆரம்பித்தபோது விக்டோரியா மகாராணி மக்களுக்கு ஓர் அறிக்கை விடுத்தார் (1858). இந்த அறிக்கை முக்கியமானது.

“இந்திய மக்கள் ஒவ்வொருவரும் அவர்களின் வேதப்பிரமாணங்கள் தொடர்பிலும் வழிவழியே அனுசரிக்கும் பிற விஷயங்களிலும் நாம் தலையிடமாட்டோம்; ஒருவருக்கும் பட்சபாதத்துடன் நடந்து மனக்கலக்கம் உண்டாக்கமாட்டோம்; எல்லாருடைய வழக்காறுகளையும் சமமாகப் பாதுகாத்து வருவது நம்முடைய அரசியல் கொள்கை. இது எமக்குச் சித்தம் என்று தெரிவிக்கிறோம்” என்ற செய்தி அறிக்கையில் இருந்தது.

இந்த அறிக்கை ஏற்கெனவே ஆட்சிசெய்த கிழக்கிந்திய கம்பெனி அதிகாரிகள் கையாண்ட தந்திரச் செயல்பாடுகளின் சாராம்சம்தான். திருவிதாங்கூருக்கும் இது பொருந்தும்.

இங்கு நிலவிய சாதியவேறுபாட்டையும் மேலாதிக்கத்தையும் கிழக்கிந்திய கம்பெனி பிரதிநிதி கர்னல் மன்றோ போன்றோர்கள் முழுவதுமாய்க் களைவதற்கு முயற்சி எடுக்கவில்லை. மாறாகச் சாதி ஆதிக்கத்தின் காரணமாக ஏற்பட்ட எதிர்வினைகளை மிஷனரிகள் பயன்படுத்த இவர்கள் ஆதரவாக இருந்தனர். இது திருவிதாங்கூரின் மதப்பரப்புதலுக்கு உதவியது.

## கோவில் அரசுடைமை

திருவிதாங்கூர் கோவில்களையெல்லாம் அரசுடைமையாக்க வேண்டும் என்ற திட்டத்தை முதலில் வடிவமைத்தவர் ஆங்கிலக் கிழக்கிந்திய கம்பெனியை எதிர்த்து உயிர்விட்ட வேலுத்தம்பி தளவாய் (1765– 1809) ஆவார். அதை நடைமுறைப்படுத்தியவர் கர்னல் மன்றோ. இதன்பிறகு கோவில் சொத்துக்கள் அரசு வருவாய்த்துறையின் கீழ் வந்தன. ஆனால் இத்துறையினர் கோவில் சடங்குகளிலும் வைதீகம் தொடர்பான செயல்பாடுகளிலும் தலையிடவில்லை. இவற்றை நடைமுறைப்படுத்தியவர்களுக்கும் பாதிப்பில்லை.

கோவில் சொத்துக்களை அரசுடைமை ஆக்கிய மன்றோ கோவில்களுக்குள் எல்லாச் சாதியினரும் நுழைவதற்கு அறிக்கை தயாரிக்கவில்லை. சடங்குகள் செய்பவரின் உரிமைபற்றி விவாதிக்கவில்லை. இது இருபதாம் நூற்றாண்டில் மக்கள் போராட்டத்தின் காரணமாகவே வெற்றியடைந்தது. இந்தப் பின்னணியிலும் அடிமைமுறையின் செய்திகளைப் பார்க்க வேண்டும்.

## எல்லாரும் அடிமைகளே

தென்திருவிதாங்கூரில் பிராமணர் தவிர்த்த பிற சாதியினர் எல்லாரும் திருவிதாங்கூர் அரசு நிர்வாகம், கோவில் நிர்வாகம் ஆகியவற்றால் ஒருவகையில் பாதிக்கப்பட்டிருக்கின்றனர். வேணாட்டரசர் வீர ராம மார்த்தாண்ட வர்மா குலசேகரன் (1458– 1469) காலத்திற்கு முன்பே வேணாடு இன்றைய திருநெல்வேலி மாவட்டம் களக்காடுவரை இருந்தது. இக்காலத்தில் கோவில் யோகக்காரர்களின் (டிரஸ்டிகள்) செல்வாக்கு சமூகத்தில் எல்லா உறுப்புகளிலும் ஊடுருவி இருந்தது.

## பத்மநாபதாசர்

திருவிதாங்கூர் ராஜ்யத்தை ஒருங்கிணைத்த அனுஷம் திருநாள் மார்த்தாண்டவர்மா (1729– 1758) காலத்திலும் கோவில் நிர்வாகத்தின் தலையீடு சமூகத்தைப் பாதித்தது. ஒருமுறை சுசீந்திரம் தாணுமாலயன் கோவிலில் நுழைய மார்த்தாண்ட வர்மாவுக்கு அனுமதி மறுக்கப்பட்டது. இதனால் அரசர் இதற்குக் காரணமான டிரஸ்டிகளின் வீடுகளுக்கு நெருப்பு வைக்க இராமையன் தளவாய்க்கு உத்தரவிட்டிருக்கிறார்.

திருவனந்தபுரம் கோவில் மூலவருக்கு உரிமை உடைய நாடு இது.

அதனால் தன்னைப் பத்மநாபதாசன் என்று அறிவித்துக் கொண்டார். இதை ஒரு ராஜதந்திரம் என்று வரலாற்றாசிரியர்கள் கூறுகின்றனர். ஆனால் அரசியல்ரீதியாக வெற்றி கிடைத்ததே தவிர சாதி அடுக்குகளின் வன்மத்தை அது களைய முற்படவில்லை. சாதிகளுக்குள் வெறுப்பு உருவாகவும் இது காரணமாக இருந்திருக்கலாம்.

## இருதுறைகளில் முரண்பாடு

திருவிதாங்கூர் ராஜ்யம் உருவான காலகட்டத்தில் கூட நம்பூதிரிகளான கோவில் நிர்வாகிகள் வருவாய்த்துறையில் மூக்கை நுழைத்தனர். அறநிலையத்துறையும் வருவாய்த்துறையும் ஒன்றாகவே இருந்ததால் சாதிவேறுபாட்டில் பல முரண்பாடுகள் ஏற்பட்டன. தென்திருவிதாங்கூரின் நன்செய் நிலங்களில் பெரும்பாலானவை கோவில்கள், அரச குடும்பத்தினர், தனிப்பட்ட ஜாதிக் குழுமங்களுக்கு உரிமை உடையனவாய் இருந்தன.

கோவிலில் பணிசெய்த தேவதாசிகளின் மான்ய நிலங்களும் ஏழை மக்களுக்கு உணவு வழங்குவதற்காகக் கொடுக்கப்பட்ட நிபந்த நிலங்களும் இப்பட்டியலில் அடங்கும். இத்தகு நிலங்களை மேற்பார்வை இட்டவர்களுக்கும் கோவில் நிர்வாகத்தினருக்கும் அடிக்கடி ஏற்பட்ட தகராறு சாதியப் பூசலுக்கும் காரணமாயிருந்திருக்கிறது. இதற்கு முதலியார் ஆவணங்களிலும் கல்வெட்டுகளிலும் சான்றுகள் உண்டு.

கி.பி. 1657ஆம் ஆண்டு ஆவணம் ஒன்று, "நம்பூதிரிகளின் ஆட்கள் வேளாளர்களின் சின்னமான வெங்கல முரசையும் வெண்டயத்தையும் உடைத்தனர். வேளாளர்கள், நம்பூதிரிகளின் திருவட்டாறு மடத்தை எரித்தனர். இருபக்கத்து இழப்புகளையும் அரசர் சரிசெய்தார். இந்தத் தகராறுக்குக் காரணம் குத்தகை நெல்லை அளப்பதில் உள்ள பிரச்சனைதான்" என்று கூறும்.

## மனிதர்களும் மாடுகளும்

மனிதர்களுக்கும் மாடுகளுக்கும்கூட வித்தியாசமில்லாமல் நடத்தப்பட்ட நிகழ்ச்சிகளை ஓர் ஆவணம் குறிப்பிடுகிறது. அடிமைகளையும் மாடுகளையும் குத்தகைவிட்டுப் பணம் பெற்றது குறித்த இன்னோர் ஆவணமும் உண்டு. (பி.இ. எண் 1)

ஓர் அடிமைக்கு வேலைசெய்யஇயலாத நிலை ஏற்பட்டால் அடிமையின் பெற்றோர் அல்லது சகோதரர் அந்த வேலையைச் செய்ய வேண்டும்.

இதைப் போலவே குத்தகையாகப் பெறப்பட்ட மாடு இறந்துவிட்டால் மாட்டைக் குத்தகைக்குக் கொடுத்தவர் பொறுப்பு ஏற்க வேண்டும். இச்செய்திகளை இந்த ஆவணம் கூறுகிறது.

## மாட்டுச் சந்தை

ஆண்டு குறிப்பிடாத ஆவணம் ஒன்று கோட்டாற்றில் (நாகர்கோவில்) மாட்டுச்சந்தை வருவதற்குச் செம்பிரான் பிள்ளை என்பவர் எதிர்ப்புத் தெரிவித்தது குறித்த செய்தியைக் கூறுகிறது. பதினைந்து நீண்டவரிகள்கொண்ட இந்த ஆவணத்தில் வேறு தகவல்களும் உள்ளன. மாடுகளைவிட திடமாய் வேலைசெய்யும் கூலி அடிமைகள் எளிதாய்க் கிடைக்கும்போது மாட்டுச்சந்தை எதற்கு என்பதால்தான் செம்பிரான் பிள்ளை இப்படி கூறியிருக்கிறார். (அ.கா. பெருமாள் 2006 ப. 158) இவரும் கோவில் நிலங்களின் குத்தகையாளராய் இருந்தவர்தான். இவரிடம் வருவாய்த் துறையினர் பெரிய அளவில் முரண்ட முடியாத சூழல் அன்று இருந்தது முக்கியம். (தெ. வேலப்பன், வஞ்சிநாடு மலர் திருவனந்தபுரம் 1961)

## ஒடுக்கப்பட்டவர்களின் நிலம்

தென்திருவிதாங்கூர் பண்பாட்டு வரலாற்றை எழுதியவர்களில் சிலர் ஒடுக்கப்பட்டவர்களுக்குச் சொந்தமாக வீடு கிடையாது, நிலமும் கிடையாது என்பன போன்ற சில செய்திகளை வலியுறுத்துகின்றனர். ஆனால் இதற்கு எதிரான ஆவணங்கள் கிடைத்துள்ளன. இந்த ஆவணங்கள் எழுதப்பட்ட காலத்தில் பதிவுசெய்யப்பட்டும் உள்ளன.

## ஆவணப் பெட்டி

நாஞ்சில் நாட்டு நிர்வாகப் பொறுப்பை வகித்துவந்த அழகியபாண்டியபுரம் முதலியார்கள் நிலத்தை விலைக்கு வாங்குதல், ஸ்ரீதனம் கொடுத்தல், அடிமை விற்பனை எனப் பல்வேறு விஷயங்கள் குறித்துப் பதிவு செய்யப்பட்ட பத்திரங்களைத் தங்களின் சொந்த ஆவணப் பாதுகாப்புப் பெட்டகத்தில் வைத்திருந்தனர். இந்த ஓலைகள் இப்போது திருவனந்தபுரம் ஆவணப் பாதுகாப்பு மையத்தில் உள்ளன.

## வழிக்கலமுறி

இந்த ஆவணங்களில் அபூர்வமான செய்திகளைக் குறிக்கும் ஓலைகள் உள்ளன. அவற்றில் ஒன்று வழிக்கலமுறி ஒற்றி ஓலை. இது மலையாள

ஆண்டு 637 ஆடி மாதம் 11ஆம் தேதி (கி.பி. 1461) எழுதப்பட்டது. ஏழுவரிகள்கொண்ட இந்த ஆவணம் சாம்பவர் ஒருவர் நிலம் ஒற்றி எடுத்த தகவலைக் கூறுகிறது.

## சாம்பவர்

பிற்காலச் சோழர்களின் ஆட்சி தென்திருவிதாங்கூரில் நடந்தபோது சாம்பவர் சாதியினர் வயல் விவசாயம் செய்ய குடிபெயர்ந்தனர் என்கின்றனர். இவர்களைப் பற்றிய ஆதாரபூர்வமான தகவல்கள் மிகக் குறைவாகவே கிடைக்கின்றன. இரட்சண்யசேனை என்னும் கிறிஸ்தவச் சமயப் பிரிவைச் சார்ந்த பணியாளர்கள் எழுதிவைத்த குறிப்புகள், அலோபதி மருத்துவர்களான இயேசுரத்தினம், வில்லியம் நோபிள் ஆகிய இருவரும் எழுதிய குறிப்புகள் ஆகியவற்றிலிருந்து சிலசெய்திகளை அறிகிறோம். இந்தத் தகவல்கள் சாம்பவர்களை நிலமற்றவர்களாகக் காட்டுகின்றன.

## சாம்பவர் ஒற்றி நிலம்

அழகிய பாண்டியபுரம் ஊரில் வாழ்ந்த அண்ணாமலைப் பெருமாள் என்னும் சுந்தரம் செட்டியார், தென்னவன் செட்டியார் ஆகிய இருவரும் இதே ஊரைச் சார்ந்த கேசவன் சாம்பான் என்பவருக்கு ஒரு நிலத்தை ஒற்றி கொடுத்திருக்கின்றனர். கேசவச் சாம்பான் இதற்கு நான்கு கலியுகராமன் பணம் கொடுத்திருக்கிறார். இப்படியாகச் செய்யப்பட்ட இந்த நில ஒற்றி ஆவணம் *(Lease Document)* பதிவு செய்யப்பட்டிருக்கிறது.

இந்த ஓலைவழி இரண்டு விஷயங்கள் தெரியவருகின்றன. ஒன்று செட்டியார் சாதியினர் சாம்பவர் சாதியினருக்கு நிலத்தை ஒற்றிக்குக் கொடுப்பதில் தயக்கம் காட்டவில்லை; ஒற்றி வாங்கும் அளவுக்கு சாம்பவர் வசதியுடன் இருந்திருக்கிறார். இன்னொன்று ஆதிக்க சாதியினர் மட்டுமே வைத்துக்கொள்ளப்படுவதாகக் கருதப்பட்ட கேசவன் என்ற ஆள் பெயரைச் சாம்பவர் சாதியினர் வைத்திருக்கிறார்.

இங்கு குறிப்பிடப்படும் செட்டியார் வணிக சமூகத்தினர். இவர் ஒற்றி கொடுத்த நிலத்தின் எல்லையும் விலையும் ஓலையில் உள்ளன. இந்த நிலம் கோவிலுக்குச் சொந்தமான நிலங்களின் நடுவே இருந்தது முக்கியமான விஷயம்.

## பள்ளருக்கு நில உரிமை

ஒடுக்கப்பட்ட சாதியினராகக் கருதப்படும் பள்ளர் சாதியைச் சார்ந்த ஒருவர் நன்செய் நிலத்துக்கு உரிமையுடையவராய் இருந்திருக்கிறார். இந்த ஆவணம் மலையாள ஆண்டு 777 ஆவணி மாதம் 23ஆம் தேதி ஞாயிற்றுக்கிழமை (1602 ஜனுவரி) எழுதப்பட்டது. (பி.இ. எண் 3)

வீரநாராயண சேரி என்னும் ஊர் (இன்றைய ஆளூர் அருகேயுள்ள வீராணி – கல்குளம் வட்டம்) அருகேயுள்ள பினைவிளை என்னும் குக்கிராமத்தில் வாழும் பள்ளர் சாதியைச் சார்ந்த ஆண்டி அடிமையத்தான், ஆண்டி கோதச்சன் ஆகிய இருவரும் காலங்காலமாக அனுபவித்து வந்த ஒரு விளைச்சல் நிலத்தை விலைக்குக் கொடுத்திருக்கின்றனர்.

இந்த நிலத்தை வாங்கியவர் ஆளூர் (கல்குளம் வட்டம்) சுனைநீர்குறிச்சி என்னும் குக்கிராமத்தில் வசித்த தேவன் துள்ளன் காங்கேயன் ஆவார். காங்கேயர் என்பது ஒரு சாதியின் பெயர். இச்சாதியினர் இப்போது காங்கிடையர் என்று வழங்கப்படுகின்றனர்.

இந்த ஆவணம்வழி பள்ளர் சாதியினர் நிலவுடைமையாளராக இருந்தனர் என்று தெரிகிறது. அதுவும் பரம்பரையாக நிலவுடைமையாளராக இருந்தனர் என்ற தகவலும் இவ்வோலையில் வருகிறது. இந்த ஆவணம் எழுதப்பட்ட காலத்தில் வேணாட்டை ஆட்சி செய்த அரசர் யார் என்று தெரியவில்லை. அப்போது பத்மநாபபுரம் தலைநகராக இருந்தது.

## ஒடுக்கப்பட்டவர் கட்டுமானம்

ஒடுக்கப்பட்டவர்களாகக் கருதப்பட்ட சில சாதியினர் கோவில்களின் கட்டுமானத்திற்கு நிபந்தம் கொடுக்கும் அளவிற்கு வசதி படைத்தவர்களாயும் இருந்திருக்கின்றனர். இதற்கு ஆவணங்களில் மட்டுமல்ல, கல்வெட்டுகளிலும் சான்று உண்டு (பி.இ. எண் 4)

## வண்ணார் கட்டுமானம்

தோவாளை வட்டம் ஆலம்பட்டு முத்தாரம்மன் கோவிலின் தெற்குச் சுவரில் 71 வரிசைக் கற்கள் மணி மண்டபத் தளவரிசை, பீடக்கல் ஆகியவற்றை அமைக்கப் பணம் கொடுத்தவர் இந்த ஊரினரான வண்ணான் நல்லமிடன் ஒளிமுத்து என்பவர் ஆவார். இதை இவ்வூர் கல்வெட்டு கூறுகிறது. இது 1821ஆம் ஆண்டினது. (கன்னியாகுமரி மாவட்டக் கல்வெட்டுகள் தொகுதி 5, எண் 28)

## சுமைதாங்கி

தோவாளை வட்டம் ஆரல்வாய்மொழி ஊருக்கும் முப்பந்தல் ஊருக்கும் இடையில், முக்கியசாலையில் ஒரு சுமைதாங்கிக்கல் இருந்தது. அதன் முகப்பில் "வழி நடைப் பயணிகளின் நன்மைக்காக முத்து மகன் மார்த்தாண்டன் வண்ணான் கட்டியது" என்ற பொறிப்பு இருந்தது. இதன் காலம் **1815.**

பெருவழிப்பாதையில் செல்லும் பயணி தன் சுமையை நின்ற நிலையில் இறக்கிவைத்து இளைப்பாற உதவுவது சுமைதாங்கி. இதை நட்டுவைப்பது தர்மமாகக் கருதப்பட்டது. அகால மரணமடைந்த பெண்ணின் நினைவாகவும் சுமைதாங்கி நடப்படுவதுண்டு.

வண்ணார் சாதியினர் அமைத்தது என்பதற்காக இது அகற்றப்படவில்லை. **2015**இல் சாலை புனரமைப்பின்போது இந்தச் சுமைதாங்கிக்கல் அப்புறப்படுத்தப்பட்டது. இந்நூலாசிரியரும் செந்தீ நடராசனும் இக்கல்வெட்டைப் பதிவு செய்தனர். இது அச்சில் வரவில்லை.

## யாதவர் பிணை

தென் திருவிதாங்கூரில் பிற்காலச் சோழர்களின் மறைமுக ஆட்சி நடந்தபோது கோட்டாற்றில் நிலைப்படை இருந்தது. அப்போது சாளுக்கிய அரசன் விஷ்ணுவர்த்தனன் நாகர்கோவில் சோழராஜா கோவிலில் விளக்கெரிக்க இருபத்தைந்து பசுக்கள் கொடுத்திருக்கிறான். இந்த நிபந்தப் பொறுப்புக்குப் பிணையாக நின்றவன் யாதவ ஜாதியைச் சார்ந்த அழிப்பன் நாடன் ஆவான். இது கி.பி. **11**ஆம் நூற்றாண்டுக் கல்வெட்டுச் செய்தி *(A.S. Ramanatha Ayyar, T.A.S. Vol VI Part I 1927 P.8)*

இதுபோன்று கோவில் நிபந்தங்களுக்கு யாதவர் பிணை நின்ற வேறு கல்வெட்டுகளும் உண்டு. ஆடுமாடுகளை மேய்த்துப் பால் கறந்து நெய் கொடுப்பது என்ற உடல் சார்ந்த வேலை மட்டுமல்லாது எங்கேயோ இருந்துவந்த அயல்நாட்டு அரசனுக்கு நிபந்தம் பொறுப்புகளை யாதவ சாதியினர் ஒருவர் ஏற்றிருக்கிறார்.

## வாதிரியார் நிபந்தம்

வாதிரியார் என்னும் சாதியினர் நெசவுத் தொழில் மட்டுமே செய்தவர்கள். இப்போது இவர்கள் ஒடுக்கப்பட்ட சாதிப் பட்டியலில் உள்ளனர். இந்தச் சாதியினரில் ஒருவர் தன் சாதிக்காரரின் தொழில்

விருத்திக்காக நிபந்தம் அளித்திருக்கிறார்.

அகஸ்தீஸ்வரம் வட்டம் தெங்கன்புதூரில் வாழ்ந்த கெங்கே காத்த பெருமாள் வாதிரியார் இவ்வூரில் பாவுநூல் நனைக்க கல்தொட்டி அமைத்தும் கிணறு வெட்டியும் இருக்கிறார். *(A.S. Ramanatha Aiyyar, T.A.S. Vol VI Part II 1927 P 108)*

## அளவர் நிபந்தம்

அகஸ்தீஸ்வரம் வட்டம் வாரியூரைச் சார்ந்த அளவர் ஒருவர் முதல் குலோத்துங்கச் சோழனின் உடல்நலத்திற்காகச் சுசீந்திரம் ஊர் சிவன் கோவிலில் விளக்கெரிக்க நிபந்தம் கொடுத்துள்ளார். இச்சாதியினர் இப்போது மிகவும் பிற்படுத்தப்பட்ட சாதிப் பட்டியலில் வருகின்றனர்.

இவர்கள் உப்பளத்தில் வேலை செய்பவர்கள். இந்த நிபந்தக் கல்வெட்டு முதல் குலோத்துங்கனின் காலத்தது. (கி.பி. 1111) கோவிலில் விளக்கெரிக்க உரிமையுடைய இவருக்குக் கோவிலில் நுழையும் உரிமை அக்காலத்தில் இருந்ததென்று ஊகிக்கலாம் *(T.A. Gopinatha Rao TAS Vol I 1926 P355)*

## அடிமை பொதுச்சொல்

அடிமை என்ற சொல் ஒருவரால் விலைக்கு வாங்கப்பட்ட பதிவு செய்யப்பட்ட பறையர் சாதியைக் குறிப்பதற்கு மட்டுமல்ல வேறுசில வழக்காறுகளிலும் வருகிறது.

ஒரு குடும்பத்திற்கோ ஒரு சாதியினருக்கோ சொந்தமான நாட்டார் கோவில்களுக்கு உரிமையுடையவர்கள் தங்களை அக்கோவிலுக்கு அடிமைக்காரர்கள் என்று சொல்லும் மரபு இப்போதும் இருக்கிறது. திருநெல்வேலி மாவட்டம், வள்ளியூர் அருகே சித்தூர் தளவாய் மாடன் கோவில் உள்ளது. இங்கே உரிமையுடையவர்கள் தங்களை அடிமைக்காரர்கள் எனக் குறிப்பிடுகின்றனர். இக்கோவிலில் அடிமைக்காரச் சுடுமண் உருவத்தை நேர்ச்சைக்காகக் கொடுக்கும் வழக்கம் இருந்தது. இன்றும் இத்தகைய ஒட்டு உருவத்தைப் பார்க்கமுடியும்.

## கோவில்களின் நாடு

புறநானூறு (எண் 126) கூறும் நாஞ்சில் பொருநன் அல்லது நாஞ்சில்

வள்ளுவனின் நாடு நாஞ்சில் நாடு என்று கூறும் வழக்கம் அவ்வை துரைசாமிப் பிள்ளையின் புறநானூற்று உரை, கே.என். சிவராஜ பிள்ளையின் கட்டுரை ஆகியவற்றின் அடிப்படையில் உருப்பெற்று வளர்ந்தது என்றாலும் மாறுபட்ட கருத்து உண்டு.

நாஞ்சில் நாட்டின் எல்லைபற்றிய விபரம் மணல்தட்டைக் கல்வெட்டில் காணப்படுகிறது. தெற்கே மணக்குடி; வடக்கே மங்கலம்; மேற்கே தோவாளை; கிழக்கே பன்றிவாய்க்கால் (இன்றைய ஆளூர்) என்பது நாஞ்சில் நாட்டின் எல்லை. இது **1547**ஆம் ஆண்டின் நிலை *(Kerala Society Papers Series 6 1930 P 315)*

இந்த எல்லைக்குட்பட்ட பகுதி திருவனந்தபுரம் ஸ்ரீ பத்மநாபப் பெருமாளுக்கும் திருவட்டாறு ஆதிகேசவப் பெருமாளுக்கும் சுசீந்திரமுடைய நயினாருக்கும் பூதப்பாண்டி உடைய நயினாருக்கும் தேசமாய் உள்ளது என்ற குறிப்பு இதில் வருகிறது.

நாஞ்சில் நாடு என்ற பகுதி இங்கு குறிப்பிடப்பட்ட திருவனந்தபுரம், திருவட்டாறு, சுசீந்திரம், பூதப்பாண்டி ஊர்களில் உள்ள கோவில்களுக்குச் சொந்தமானது என்று இக்கல்வெட்டு கூறுகிறது. ஆகவே பதினாறாம் நூற்றாண்டிலேயே நாஞ்சில் நாடு கோவில்களுக்கு உரிய நாடாக இருந்தது என்று ஊகிக்கலாம்.

## பன்னிருப் பிடாகைகள்

ஆரம்பக்காலத்தில் நாஞ்சில் நாடு ஆறு பிடாகைகளாகக் குறிப்பிடப்பட்டாலும் *(Ramanatha Ayyar TAS Vol 5 1924 P 207)* பிற்காலத்தில் பன்னிரண்டு பிடாகைகள் என்று கூறுவது மரபாகிவிட்டது. அதோடு மங்கலம் ஆளூர் இரண்டையும் எல்லைகளாகக் கூறும் வழக்கம் இல்லாமல் ஆனது.

இன்றைய அகஸ்தீஸ்வரம் வட்டம், தோவாளை வட்டம் இரண்டும் நாஞ்சில்நாட்டு பன்னிரண்டு பிடாகைகளுக்கு உட்பட்டதாயிற்று. பன்னிருப் பிடாகைகளின் பெயர்கள் பின்வருமாறு.

அழகியபாண்டியபுரம் பிடாகை (தோவாளை வட்டம்)

அனந்தபுரம் பிடாகை (கடுக்கரை தோவாளை வட்டம்)

தாழக்குடிப் பிடாகை (தோவாளை வட்டம்)

மேல்பிடாகை (தோவாளை வட்டம்)

நடுவுப் பிடாகை (தோவாளை வட்டம்)

தோவாளைப் பிடாகை (தோவாளை வட்டம்)

படப்பற்றுப் பிடாகை (தோவாளை வட்டம்)

கோட்டாறு பிடாகை (அகஸ்தீஸ்வரம் வட்டம்)

பறக்கைப் பிடாகை (அகஸ்தீஸ்வரம் வட்டம்)

தேர்ப்பிடாகை (அகஸ்தீஸ்வரம் வட்டம்)

சுசீந்திரம் பிடாகை (அகஸ்தீஸ்வரம் வட்டம்)

அகஸ்தீஸ்வரம் பிடாகை (அகஸ்தீஸ்வரம் வட்டம்)

## நாட்டுக் கூட்டம்

பிடாகைத் தலைவர்கள் நாட்டு எனப்பட்டனர். நாட்டுகளின் கூட்டம் நாட்டுக்கூட்டம் எனப்படும். இதன் தலைவர் அழகியபாண்டியபுரம் பெரியவீட்டு முதலியார் எனப்பட்டார். இவர் சைவவேளாள சாதியினர். நாட்டுக் கூட்டத்தில் வேளாளர்களின் பிரிவினர் உறுப்பினராய் இருந்தனர். இவர்களில் நுட்பமான வேறுபட்ட பிரிவுகள் உள்ளன.

சைவ வேளாளர், மக்கள்வழி, மருமக்கள் வழி, செட்டி பிள்ளை, வெள்ளாளப் பிள்ளை, வீர நிலை வேளாளர், செட்டி வேளாளர், வெள்ள நாடர், ஓதுவார் (குருக்கள்) எனச் சில பிரிவுகள் பற்றிய குறிப்புகள் கிடைக்கின்றன.

பிடாகைத் தலைவர் முதலியார் சிறிய வழக்குகளை விசாரிப்பது, அபராதம் விதிப்பது, சிறு தண்டனை கொடுப்பது என்னும் உரிமையுடையவராய் இருந்தார். *(K.P. Padma naba Menon Vol II 1993 P 521)* நாட்டு அமைப்பு அரசனுக்கும் நிர்வாகத்துக்கும் கட்டுப்பட்டது.

பிடாகைத் தலைவராகத் தரவாட்டுக்காரரான நில உடைமையாளரே வரமுடியும். இது மரபுவழி வருவது. ஒருவகையில் நாஞ்சில்நாட்டு பன்னிரண்டு பிடாகைகளின் மொத்த நிர்வாகப் பொறுப்பும் அந்தந்தக் குடும்பங்களின் கையில் இருந்தது என்று கூறமுடியும். இவர்களை மீறிச் சாதாரண சிறுநில விவசாய வேளாளர்களால் ஒன்றும் செய்ய முடியாது.

பிடாகைத் தலைவரான காரணவருக்குக் காரியஸ்தர் *(Assistant)*, முதல்பிடி *(Treasurer)*, கணக்கர் *(Accountant)*, கரையாளர் *(Revenue Collector)*, முறையான் பிள்ளை *(Petty Servant* ), காவலர் *(Gaurd)*, ஊர்க்காவலர் *(Village Gaurd)* என்னும் உதவியாளர்கள் இருந்தனர். இவர்கள் வெவ்வேறு சாதியைச் சார்ந்தவர்கள்.

பிடாகைக்குக் கீழடங்கிய ஊர்களில் ஊர்ச்சபை இருந்தது. இது ஊர்க்கூட்டம் எனப்பட்டது. இதன் தலைவர் தரவாட்டுக்காரராக இருக்க முடியும். ஆக மொத்த நாஞ்சில் நாட்டில் தரவாட்டுக் குடும்பங்கள் சில மட்டுமே செல்வாக்குடன் இருந்தன. மற்ற வேளாளர்களில் சிறுநில விவசாயிகள், கூலி விவசாயிகள் எல்லாரும் அடிமைபோன்ற தொழிலாளிகளாய் இருந்தனர்.

பிடாகைக் காரணவர்களின் மொத்த நிலங்களில் கோவில் நிலங்களும் அடங்கும். இவை காலங்காலமாகக் கோவில்களுக்கு நிபந்தமாகக் கொடுக்கப்பட்டவை. இவை தவிர அரசக் குடும்பத்து நிலங்களும் உண்டு.

வேளாள நிலச்சுவான்தார்களுக்கும் அரசு நிர்வாகத்திற்கும் இருந்த உறவு எப்போதும் சுமூகமாக இருக்கவில்லை. அரசு நிர்வாகம் பிடாகைத் தலைவர்களை அடிமைகளைப் போல் நடத்தியதுபோலவே ஊர்ச்சபைத் தலைவர்கள் தங்களின் கீழுள்ள வேளாள விவசாயிகளை அடிமைகளாக நடத்தினர். இதற்கு முதலியார் ஆவணங்களிலும் கல்வெட்டுகளிலும் மறைமுகமானதும் வெளிப்படையானதுமான சான்றுகள் உள்ளன உதாரணமாக சில வருமாறு:

## பிராமண போஜனத்துக்கு

கி.பி. **1632**ஆம் ஆண்டு ஐப்பசி மாதம் எழுதப்பட்ட ஓர் ஆவணம் “அன்றைய வேணாட்டு அரசர் பிறந்தநாள் விழாவிற்கும் ஆவணி ஓணவிழாவிற்கும் பிற விசேஷ நாட்களுக்கும் காய்கறி தயிர் போன்றவற்றைத் தலைநகருக்கு (அப்போது பத்மநாபபுரம்) கொண்டுவர வேண்டும்; இந்த வழக்கம் முந்தைய அரசர் குலசேகரப் பெருமாள் காலத்திலிருந்தே நடக்கிறது.

இந்தச் செயல்பாட்டில் தொய்வு வரக்கூடாது. முக்கியமாக இந்தப் பொருட்களை வேளாளர்கள் தலையில் சுமந்து வரவேண்டும். இச்செய்தியை நாஞ்சில்நாட்டுத் தென்வீதி, வடவீதி மக்களுக்கு அறிவிக்க வேண்டும் என்றும் இந்த ஆவணம் குறிப்பிடுகிறது. (பின் இணைப்பு எண்

5)

கி.பி. 1726ஆம் ஆண்டு ஆவணம் ஒன்று, முஞ்சிறை திருமலை சிவன் கோவில் விசேஷத்திற்கு நாஞ்சில் நாட்டின் பிடாகைக்காரர்கள் கொண்டுவர வேண்டிய பொருட்களைப் பட்டியல் இடுகிறது. அவை வழுதலங்காய், பூசணிக்காய், ஒரு கோட்டைத் தயிர், அருவா, கோருவை, குழைச்சட்டுவம் ஆகியன.

இப்பொருட்கள் முஞ்சிறை கோவில் சிவராத்திரி விழாவில் சர்வாணி பிராமணர்களின் மத்தியான போஜனத்திற்கு (வைச்சூட்டு நடத்தும் வகைக்கு) கொடுக்கப்பட்ட குறிப்பிடத்தக்கது.

இவற்றை முஞ்சிறை காட்சிப் பண்டாரத்திடம் கொடுக்க வேண்டும் என்பது கட்டளை.

கோவில் விழாவில் பிராமணர் சாப்பாட்டிற்குக் கோவில் நிலங்களின் குத்தகைக்காரர்களான வேளாளர்கள் தாங்களாகவோ குறு விவசாயிகளின் உதவியுடனோ கொண்டு செல்ல வேண்டும். இது அரசு ஆணையாக இருந்தது. இதைக் கட்டாயப்படுத்தினார்கள்.

கி.பி. 1726ஆம் ஆண்டு ஆவணம் வேணாட்டின் கடைசி அரசனான இராமவர்மாவின் (1721– 1729) காலத்தது. இந்த அரசரின் பிறந்தநாள் விழாவிற்கு வரும் பிராமணர்களுக்கும், மணலிக்கரை நம்பூதிரிகளுக்கும் சாப்பாடு கொடுக்க காய்கறிகள் சமையல் கருவிகள் போன்றவற்றைக் கொண்டுவர நாஞ்சில்நாட்டு வேளாளர்களுக்குக் கட்டளை இட்டதை ஓர் ஆவணம் கூறும் (பி.இ. எண் 6)

திருவிதாங்கூரின் முதல் அரசனான மார்த்தாண்டவர்மா ஆட்சிக்கு வந்தபோது அவரின் பிறந்தநாள் விழாவில் (1728) இரண்யசிங்க நல்லூரில் குடியிருந்த பிராமணர்களுக்குச் சாப்பாடு போட உத்தரவு இட்டார். இதன் பொறுப்பு வேளாளருக்கு. இது அரசரின் நீட்டு. (பி.இ. எண் 7)

இதுபோல அச்சில் வராத வேறு ஆவணங்களும் உண்டு. (பி.இ. எண் 8) மேல் குறிப்பிட்ட நீட்டுகளில் பால் தயிர் காய்கறிகள் சமையல் சாதனங்கள் போன்றவற்றை வேளாளர்களே சுமந்து கொண்டுவர வேண்டும் என்ற உத்தரவு உள்ளது (பி.இ. எண் 9)

சூத்திரர்களில் மேலானவராகக் கருதப்பட்ட வேளாளர்கள் இந்தப் பொருட்களைச் சுமந்தால் தீட்டில்லை என நம்பப் பட்டதால் இந்த

உத்தரவு இருந்திருக்கலாம். பொதுவாக குத்தகைக்காரர்கள் அடிமையைப் போல் நடத்தப்பட்டமைக்கு இவை சான்றுகள்.

இந்த உத்தரவு குத்தகைக்காரர்களிடம் எதிர்ப்பை உண்டாக்கியுள்ளது. ஆனால் மறுப்புச் சொல்ல முடியாது. சொன்னால் குத்தகை பறிபோகும். இதனால் ஊரைவிட்டுக் குடிபெயர்ந்தவர்களும் உண்டு.

நாஞ்சில்நாட்டுக் கடுக்கரை (தோவாளை வட்டம்) வடக்கு வீட்டுக் குடும்பத்தைச் சார்ந்த ஒருவர் பிராமணர் போஜனத்துக்காக உணவுப் பொருட்களையும் காய்கறிகளையும் சுமப்பதற்கு மறுப்பு தெரிவித்திருக்கிறார். அதனால் அண்ணனிடம் ஏற்பட்ட தகராறில் வீட்டை விட்டே கிளம்பிக் கொச்சி ராஜ்யத்துக்குப் போய்விட்டார். அங்கே வணிகம் செய்து வீடுகட்டிக் கொண்டார். கேரளப் பெண்ணை மணந்து அங்கே வாழ்ந்தார். (என்.டி. கிருஷ்ணன், 2002, பக். 54, 55)

இப்படியாக மாறுபாடு கொண்டு மதுரைக்குக் குடிபெயர்ந்த வேளாளக் குடும்பங்களும் உண்டு (நாராயணன் 1932 ப. 26).

## கட்டாயக் கட்டுமான வேலை

கோவில்களைக் கட்டியவர்கள் அரசர்களும் தனிப்பட்டவர்களும் என்பது பொதுவான கருத்து. ஆனால் கோவிலில் நுழைய அனுமதிக்கப்பட்ட சாதியினர் சம்பளம் வாங்காமல் செய்த உடலுழைப்பும் இதில் அடங்கும். இதற்கு முதலியார் ஆவணங்களில் சான்று உண்டு.

கி.பி. 1798ஆம் ஆண்டு ஆனி மாதம் 8ஆம் தேதி எழுதப்பட்ட ஆவணம் சுசீந்திரம் (அகஸ்தீஸ்வரம் வட்டம்) தாணுமாலயன் கோவில் பிரகாரப்பணியில் நீண்ட வரிக்கற்களை உருட்டிச் செல்வதற்கு அம்பலக்காரர் ஆட்களைத் திரட்டி அனுப்ப வேண்டும். அப்படி செய்யவில்லை என்றால் அம்பலக்காரருக்கு அபராதம் விதிக்கலாம். கல் உருட்ட வர மறுத்தவர்களைப் பிடித்துக் குனிய வைத்து, முதுகில் கல்லை ஏற்றிவைத்துத் தண்டனை கொடுக்க வேண்டும் என்ற திவானின் உத்தரவை இந்த ஓலை குறிப்பிடுகிறது.

இந்த உத்தரவைப் பிறப்பித்த காலத்தில் திருவிதாங்கூரின் அரசராகக் கார்த்திகைத் திருநாள் ராமவர்மா என்ற தர்மராஜா (1758– 1798) இருந்தார். (பி.இ.எண் 10)

## பிடாகை ஒழிப்பு

பதினெட்டாம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் பிடாகை அமைப்பு ஒழிக்கப்பட்டது. இதற்குப் பல காரணங்களைக் கூறலாம்.

நாஞ்சில்நாட்டு நாட்டுக் கூட்டத்தை நிர்வகித்த பன்னிரண்டுக் குடும்பங்களும், பிடாகைக் கிராமங்களில் உள்ள வேளாள விவசாயக் கூலிகளையும் சிறுநில உரிமையாளரையும் நடத்திய விதம்.

கோவில் நிர்வாகம், வருவாய்த்துறை (இரண்டும் ஒன்றுதான்) ஆகியன நிலக்குத்தகைக்காரர்களுடன் கொண்டிருந்த மோசமான உறவு.

நிர்வாகம் என்ற பேரில் அழகியபாண்டியபுரம் முதலியார் நடத்திய ஊழல்.

இதுபோன்ற காரணங்களால் நாட்டுக்கூட்டம் உடைக்கப்பட வேண்டும் என்ற சூழ்நிலை உருவானது. அன்றைய திவான் உம்மணித் தம்பி, கிழக்கிந்திய கம்பெனியின் உதவியுடன் நாட்டுக்கூட்டத்தை ஒழித்தார்.

## வேலுத்தம்பியின் ஆவணம்

கிழக்கிந்திய கம்பெனியை எதிர்த்து உயிர்விட்ட வேலுத்தம்பி தளவாய் எழுதிய நீட்டு முதலியார் ஆவணங்களில் மூன்று உள்ளன.

இந்த ஆவணங்களில் ஒன்று 1808ஆம் ஆண்டு ஆனி மாதத்தில் எழுதப்பட்டது. அரசு அதிகாரிகளான அம்பலக்காரரும் பெரிய வீட்டு முதலியாரும் தங்களுக்குள் மாறுபாடுகொண்டதால் சிறு விவசாயிகள் பாதிக்கப்பட்டதை இந்த ஆவணங்கள் கூறுகின்றன.

ஒருமுறை அம்பலக்காரரை எதிர்த்த சிறுவிவசாயியான காக்கும் பெருமாள் கைது செய்யப்பட்டு உதயகிரிக் கோட்டையில் காவலில் வைக்கப்பட்டிருக்கிறார் (அ.கா. பெருமாள் 2006 ப. 142)

அச்சில் வராத கவிமணியின் கையெழுத்துப் பிரதியில் வேளாள சிறு விவசாயிகளை அம்பலக்காரரும் பிடாகைத் தலைவர்களும் துன்புறுத்தக்கூடாது என்று அரச நீட்டு அனுப்பப்பட்ட செய்தியும் உண்டு.

ஆக ஒருவகையில் நிர்வாகம் என்ற பேரில் பிடாகைத் தலைவர்களாக இருந்த வேளாளர்கள் சிலரின் அடிமைகள்போல சிறுநில விவசாயிகளும், கூலி விவசாயிகளும் சிறுநிலக் குத்தகைக்காரர்களும் இருந்தனரென்று ஊகிக்கலாம்.

## சுமடு எடுப்பவர்

சுமடு எடுக்கும் கூலித்தொழிலைச் செய்தவர்கள் எல்லா சாதிகளிலும் இருந்தார்கள்; இவர்கள் கோவில் நிர்வாகத்திரான அரசு அதிகாரிகளின் கட்டுப்பாட்டில் இருந்தாலும் பிடாகைக்காரர்களும் இவர்கள்மீது அதிகாரம் செலுத்தினர்.

இவர்கள் அடிமைகள் அல்லர்; என்றாலும் அடிமைகள் போல் நடத்தப்பட்டனர். (சான்று கி.பி. 1828 தை மாதம் 16ஆம் தேதி ஆவணம்) திவான் வெங்கடராயர் தோவாளை தாசில்தாருக்கு எழுதிய உத்தரவு தமிழ் எழுத்தில் மலையாள மொழியில் உள்ளது.

இந்த உத்தரவில் "முதலியார் வகையில் அடங்கிய ஆட்கள் சுமடு எடுக்கும் தொழிலை அப்படியே செய்ய வேண்டும்; இவர்கள் தொழிலை மாற்றக்கூடாது. இவர்களை ஒப்பந்தக் கூலிகளாக (தற்காலிக அடிமை) கொள்ளலாம்" என்று செய்தி அனுப்பியுள்ளார். இது அச்சில் வராத ஓலை. ஆக சுமடு எடுக்கும் கூலிகள் முறைப்படிப் பதிவு செய்யப்பட்ட அடிமைகள் இல்லை; ஆனால் அடிமைகளே.

இது போல் இன்னோர் ஆவணமும் இதே செய்தியைக் கூறுகிறது ". . . முதலியாருட வகையில் ஒள்ள ஆட்கள் சுமடு எடுப்பு முதலாயிட்டுள்ள செய்யணும் என்னும் . . ." என இந்த ஆவணம் கூறும். (அ.கா. பெருமாள் 2006 ப. 80)

## அதிகாரிகளின் தூண்டுதல்

ஒடுக்கப்பட்ட மக்களைத் துன்புறுத்துவதற்கு அதிகாரிகள் மறைமுகமாகக் காரணமாயிருந்தனர். இது குறித்த ஓர் ஆவணம் உண்டு.

முதலியாரும் பிடாகைக்காரர்களும் அரசு அதிகாரிகளுடன், கம்பெனி அதிகாரிகள் அலுவலகக் காரியமாக வரும்போது சாப்பாட்டிற்குரிய அரிசியைச் சேகரித்துக் கொடுக்க வேண்டும். கிழக்கிந்திய கம்பெனி உயர் அதிகாரிகள் சாப்பிடுவதற்கு பறையர் குடியிருப்புகளில் உள்ள கோழிகளைப் பிடிக்க வேண்டும் என்ற வாய்மொழி உத்தரவு இருந்ததை இந்த ஆவணம் கூறும். (அ.கா. பெருமாள் 2006 ப. 137)

இன்னோர் ஆவணம், "பூதப்பாண்டி கோவில் தேர்த் திருவிழாவில் தேர் அச்சும் சக்கரமும் செப்பனிட ஊர் வேளாளப் பிரமுகர்கள் ஏற்பாடு செய்ய வேண்டும்; இதைக் கோவில் ஸ்ரீகாரியம் மேற்பார்வை செய்ய வேண்டும். தெப்பத் திருவிழாவில் தெப்பம் கட்ட வேண்டிய ஈறலைப் பறையர்கள்தாம் கொடுக்க வேண்டும். இதைக் கட்டாயமாகச் செய்யுமாறு

அதிகாரிகள் கூற வேண்டும்” என்று ஆவணம் கூறுகிறது.

“. . . பிள்ளைமாரையும் அயச்சுவிட்டு தேரினு அச்சுவண்டியும் . . . வலிக்க வேணும்; தெப்பத்தினு அப்பிடாகையில் ஒள்ள பறச்சேரியெல்லாம் கரையேற்றி ஈறல் வெட்டிச்சு கொடுக்கலில் வேணும்” (மேற்படி பக். 157)

## விசாரிப்பு அடிமை

கோவில் நிர்வாகம், கிழக்கிந்திய கம்பெனி பிடாகைக்காரர்கள் போன்றவற்றின் தலையீடு இல்லாமல் அடிமையைப் போல் நடத்தப்பட்ட வேறு சிலரும் உண்டு. இது குறித்து சைவ வேளாள குடும்பத்தில் நடந்த ஒரு நிகழ்ச்சி பதிவாயிருக்கிறது.

சைவ வேளாளரான முதலியார் குடும்பத்தில் நல்லதும் துக்கமுமான சடங்குகளில் எல்லா காரியங்களையும் செய்த ஒரு குடும்பத்தைப் பற்றி கி.பி. 1798 ஆவணம் கூறுகிறது. இந்த ஆவணத்தை 1930களில் பத்மநாபபிள்ளை என்பவர் தனிப்பட்ட ஒருவரிடமிருந்து எடுத்திருக்கிறார். (பி.இ.எண். 11)

சங்கரமூர்த்தி என்பவர் முதலியார் குடும்பத்தில் நல்லதும் துக்கமுமான காரியங்களைக் கவனிக்க வேண்டும். அவர் இல்லையென்றால் அவரது மக்கள் செய்ய வேண்டும். இது மரபுவழி வருவது.

முதலியார் வீட்டில் இப்படி செய்வதற்கு வழிவழியாகவே கடமைப்பட்டவர்களாய் இருந்தனர். இச்செய்தி ஆவணத்தில் உள்ளது. ஒருவகையில் இது எழுதப்படாத அடிமை முறை. இது போன்ற செயல்களைச் செய்பவரை விசாரிப்புக்காரன் என நாஞ்சில் நாட்டில் கூறுவர். 1950களில் கூட இச்சொல் வழக்கத்திலிருந்தது. இது பதிவுசெய்யப்படாத அடிமை முறை.

## வேளாளர் வகை

தென்திருவிதாங்கூரில் சோழநாட்டு, பாண்டிநாட்டுப் பகுதிகளிலிருந்து குடியேறியவர்களும் ஏற்கெனவே பூர்வீகமாய் இருந்தவர்களும் ஆன வேளாளர்களிடம் பல்வேறு பிரிவுகள் இருந்தன. இவற்றிற்குள் பெரும்பாலும் மண உறவு நடப்பதில்லை. இவர்களிலும் மேலானவர்கள், ஒதுக்கப்பட்டவர்கள் என்னும் பிரிவுகள் இருந்தன. இப்போது அந்தப் பிரிவுகள் இல்லை. எல்லா உட்பிரிவினரும் மணஉறவால் கலந்துவிட்டனர்.

இவை பற்றி கன்னியாகுமரி மாவட்டக் கல்வெட்டுகளிலும்

ஆவணங்களிலும் குறிப்புகள் கிடைக்கின்றன.

வேணாட்டு அரசர்களுடனும் அரசியலிலும் நிர்வாகத்துடனும் தொடர்புகொண்டவர்கள் மருமக்கள்வழி வேளாளர்கள். இந்த வகை வேளாளர்களில் பெருமளவினர் திருவிதாங்கூர்க் கோவில்கள் உள்ளிட்டுத் திருவாவடுதுறை, தருமபுரம், திருப்பனந்தாள் மடங்களின் விளைச்சல் நிலங்களையும் அரச குடும்பத்தாரின் நிலங்களையும் குத்தகை எடுத்துப் பயிரிட்டனர்.

தோவாளை ஊரில் நடந்த கிருஷிக்காரர் (விவசாயிகள்) மாநாட்டு அறிக்கை சிறுபிரசுரமாக வந்திருக்கிறது. (1– 10– 1948). இதில் நாஞ்சில்நாட்டில் வயல் விளைச்சல் நிலங்களில் மூன்றில் இரண்டு பகுதிகள் குத்தகை நிலங்கள் ஆகும் இவற்றைப் பயிரிட்ட மருமக்கள்வழி வேளாளரின் குடும்பங்கள் ஒவ்வோர் ஊரிலும் இருந்தன என்னும் செய்தி உள்ளது.

இந்த நிலங்களைக் குத்தகை எடுத்தவர்களும் சொந்த நிலங்கள் உடையவர்களும் குறைந்த எண்ணிக்கை உடையவரே. இவர்களில் மிகப் பெரும்பாலோர் சிறுநில விவசாயிகளும் கூலி விவசாயிகளுமே. இதனால் இந்தப் பிரிவில் மிகுந்த ஏற்றத் தாழ்வு இருந்தது.

கோவில் நிலங்களைக் குத்தகை எடுத்திருந்த செயல்பாடு இவர்களின் பண்பாட்டைப் பாதித்திருந்தது. மருமக்கள்வழிமுறை 1926இல் சட்டப்படி ஒழிக்கப்பட்டாலும் பண்பாட்டு ரீதியான நடைமுறை சில சமயம் தொடர்ந்தது. கன்னியாகுமரி மாவட்டம் தமிழகத்துடன் இணைந்த பின்பு (1956) இவர்கள் கொஞ்சம் கொஞ்சமாகப் பண்பாட்டளவில் விடுபட ஆரம்பித்தனர்.

## வகைகள்

முதலியார் ஆவணங்களிலும் கல்வெட்டுகளிலும் வேளாளர்களின் பல்வேறு பிரிவுகளைப் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன.

கன்னியாகுமரி ரயில்வே நிலையத்தின் அருகேயுள்ள குகநாதேஸ்வரர் கோவிலில் இரண்டாம் ராஜேந்திர சோழனின் ஐந்தாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு (கி.பி. 1057) உள்ளது. இதில் கன்னியாகுமரி பகவதி கோவிலில் தேவதானம் பொறுப்பில் இருந்த வீரநிலை வேளாளர் ஒருவரின் தாய் இந்தக் கோவிலுக்கு நந்தாவிளக்கும் இருபந்தைந்து சாவாமூவாப்பேராடும் கொடுத்திருக்கிறாள் என வருகிறது. *(T.A.S. Vol I*

*Part XIV P 242* )

இங்கு குறிப்பிடப்படும் வீரநிலை வேளாளர்கள் என்ற பிரிவினர் இப்போது நாஞ்சில்நாட்டில் இல்லை. இவர்களைப் பற்றிய ஒரு குறிப்பு 'கன்னியாகுமரி களவு மாலை' என்ற கதைப்பாடல் பிரதியில் உள்ளது. கன்னியாகுமரி பகவதி கோவிலில் நடந்த களவுதொடர்பாக திருவிதாங்கூர் 'பேஸ்கார்' (உயர் அதிகாரி) விசாரணை நடத்தினார். அப்போது சந்தேகத்தின் பேரில் வீரநிலை வேளாளர் ஒருவரும் விசாரிக்கப்பட்டார்.

இவர் கோவில் சந்நிதித் தெருவில் தேவதாசிகள் குடியிருந்த பகுதியில் இருந்தார். இந்தக் களவு நிகழ்ச்சி பத்தொன்பதாம் நூற்றாண்டு ஆரம்பத்தில் நிகழ்ந்தது.

இந்த வேளாளர் பிரிவினர் வேளாளர்களின் பிற பிரிவில் கலந்திருக்கலாம். இவர்கள் பிற்காலச் சோழர்காலத்தில் நாஞ்சில்நாட்டிற்குக் குடிபெயர்ந்திருக்கலாம்.

கன்னியாகுமரி மாவட்டம் அகஸ்தீஸ்வரம் வட்டம் கொட்டாரம் ஊரில் கற்பகவிநாயகர் கோவிலில் இரண்டு கல்வெட்டுகள் உள்ளன. இவற்றைக் கல்வெட்டியல் அறிஞர் செந்தீ நடராசன் அடையாளம் கண்டு பதிவுசெய்துள்ளார்.

இவை நிபந்தக் கல்வெட்டுகள். இவற்றில் ஒன்று 1851ஆம் ஆண்டினது. இக்கல்வெட்டில் செட்டு வெள்ளாளர் என்னும் சாதிப்பெயர் வருகிறது. இவர்கள் வணிகம் செய்திருக்கலாம். இவர்களும் நாஞ்சில்நாட்டு வேளாளருடன் கலந்துவிட்டனர்.

கல்குளம் வட்டம் திருவிதாங்கோடு ஊரில் உள்ள சிவன் கோவில் வளாகத்துக் கல்லறையில் ஒரு வட்டெழுத்துக் கல்வெட்டு உள்ளது. இது பிற்காலச் சோழர் (கி.பி. 11ஆம் நூற்.) காலத்தது. திருக்கண்ணன் கோட்டு வெள்ளாளன் கருநட்டவி என்பவன் இக்கோவில் மகா தேவர்க்கு விளக்கு எரிக்க நிபந்தம் அளித்த செய்தியை இக்கல்வெட்டு குறிப்பிடுகிறது.

இங்கு குறிப்பிடப்படும் திருக்கண்ணன்கோடு இப்போது திக்கணங்கோடு (கல்குளம் வட்டம்) எனப்படுகிறது. நாஞ்சில்நாட்டு வேளாளர்கள் வாழும் பகுதிகளின் எல்லையில் திக்கணங்கோடு அடங்காது. இக்கல்வெட்டை முதலில் பதிப்பித்த கே.வி. சுப்பிரமணிய அய்யர் திருக்கண்ணன்கோட்டில் இப்போது வாழும் குடியிருப்பு வேளாளர்களே அவ்வூரில் முன்னர் வாழ்ந்தவர்கள் என்கிறார். *(TAS Vol 4 P 141)* இந்த ஊர் வேளாளர்கள்

நாஞ்சில்நாட்டில் கொண்டிருந்த உறவு விரிவாகத் தெரியவில்லை.

திருவிதாங்கூர் (இன்றைய திருவிதாங்கோடு) ஊர்ப் பெண்கள் பள்ளியின் அருகேயுள்ள தனிக்கல்லில் அறுபத்தாறு வரிகள் கொண்ட கல்வெட்டு உள்ளது. இதன் காலம் கி.பி. 1452. வட்டெழுத்தில் அமைந்த இந்தக் கல்வெட்டில் வெள்ளாளர், வெள்ளநாடர் ஆகிய இருபிரிவினருக்கிடையே உள்ள பூசல் குறிக்கப்படுகிறது. *(A.S. Ramanatha Ayyar, T.A.S. Vol V 1924 P 90)*

இந்தக் கல்வெட்டு கூறும் செய்தியைத் திருநெல்வேலி மாவட்டம் அம்பாசமுத்திரம் வட்டம் கல்லிடைக்குறிச்சி ஊரில், கோட்டைத் தெரு தனிக்கல்லில் காணப்படும் கல்வெட்டும் உறுதிபடுத்துகிறது. இது நாற்பத்து நான்கு வரிகள் கொண்ட கல்வெட்டு. இதன் காலம் 1453 (திருநெல்வேலி மாவட்டக் கல்வெட்டுகள். தொகுதி 1 தமிழ்நாடு அரசு தொல்லியல்துறை 2009 எண் 219– 2005)

இந்தக் கல்வெட்டில் வேளாளர், வெள்ளநாடர் ஆகிய இரு பிரிவினருக்கும் இடையே நடந்த பூசல் பற்றிய செய்திகள் உள்ளன. வெள்ளநாடர், வேளாளரின் ஒரு பிரிவினர்தான்; ஒருவகையில் கீழ்பட்ட பிரிவினராக வெள்ளநாடர் கருதப்பட்டனர் என்று ஊகிக்கலாம். இந்தப் பிரிவினர் குறித்து வேறு கல்வெட்டுகளிலோ ஆவணங்களிலோ எவ்விதக் குறிப்பும் இல்லை.

திருவனந்தபுரம் அருகே வெள்ளநாடு என்ற பகுதி உள்ளது. அந்த ஊர் வேளாளர்களா இவர்கள் என்பதும் யோசிக்கத்தக்கது. ஒரே சாதியினரின் உட்பிரிவினரிடம் இப்படி ஒரு பூசல் ஏன் ஏற்பட்டதென்று தெரியவில்லை. கல்வெட்டில் இது பற்றிய விளக்கமும் இல்லை.

இவ்விரு பிரிவினரிடையே உள்ள பூசல் உச்சக்கட்டத்துக்குச் சென்றபோது வெள்ள நாடர் செய்யத் தகாதவை குறித்த கட்டுப்பாடுகள், கட்டளை அறிக்கையாக வெளியிடப்பட்டுள்ளன.

அவை:

♦ வெள்ளநாடர் தமிழ்ப்பகுதிகளில் உள்ள பெண்களைத் திருமணம் செய்யக்கூடாது; வேறு தொடர்புகளும் வைத்துக் கொள்ளக்கூடாது.

♦ நம்முடன் (வேளாளருடன்) கூலி வேலை செய்யத் தடை செய்யப்படுகிறார்கள்.

♦ பொதுமக்களுக்காக கணக்கு வேலைகள் செய்யக்கூடாது.

♦ ஊர் மக்களுடன் எந்தக் கொடுக்கல் வாங்கலும் வைத்துக் கொள்ளக்கூடாது.

இப்படியாக ஒதுக்கப்பட்டவர்களில் இருபத்து மூவரின் பேரின் பெயர்கள் இக்கல்வெட்டில் உள்ளன. இவர்களைக் காணும் இடத்தில் கொல்லுமாறு இடப்பட்ட கட்டளையை இக்கல்வெட்டு கூறுகிறது.

இக்கல்வெட்டை 1920இலேயே பிரதிசெய்த ராமநாத அய்யர், இங்கு குறிப்பிடப்படும் வெள்ளநாடர்கள் தமிழ் வேளாளரைப் போன்றவர்களே என்கிறார். அத்தோடு இக்கல்வெட்டில் இவர்கள் வெள்ளநாடர் என்றே குறிக்கப்படுகின்றனர். (மேற்படி ப 90).

இந்தப் பிரச்சினைக்குக் காரணமானவர்களில் இருபத்து மூவரும் கொல்லப்பட வேண்டும் என்ற உத்தரவில் சொல்லப்பட்டவர்களில் ஈச்சம்பி பேரூர் நாயர், செம்பி பணிக்கர் என்னும் பெயர்கள் உள்ளன. எனவே இந்த வெள்ளநாடர் – வேளாளரின் உட்பிரிவினர் – ஒருவகையில் கீழானவர்களாகக் கருதப்பட்டவர்கள் என்று ஊகிக்கலாம்.

திருவிதாங்கோடு ஊர், நாஞ்சில்நாட்டு வேளாளர்கள் வாழும் எல்லைக்கு உட்பட்ட பகுதியில் அடங்காதது. 50'களில் கூட திருவிதாங்கோட்டு வேளாளர்களுடன் மணஉறவு கொள்ளுவது நாஞ்சில்நாட்டில் வேளாளர்களிடம் மேலானதாகக் கருதப்படவில்லை. திருவிதாங்கோட்டுப் பெண்ணை ஊர்ப்பெயருடன் சேர்த்தே அழைத்தனர்.

தென்காசி மாவட்டம் கல்லிடைக்குறிச்சியில் தனிக் கல்லில் உள்ள செய்தியில் வேளாளரின் உட்பிரிவினரான வெள்ளநாடர், வேளாளர்களுக்கு ஏதோ ஒருவகையில் கொடும் துன்பம் செய்தனர் எனக் குறிப்பிடப்படுகிறது. இங்கு 'திருவிதாங்கோடு' ஊர் குறிப்பிடப்படவில்லை.

இதனால் வேளாளர்களுக்குப் பெரும் கெடுதல் செய்த உட்பிரிவினர் இடைநாட்டில் பரவலாக இருந்திருக்கலாம் என்றும் கருதலாம். பதினைந்தாம் நூற்றாண்டில் வேணாட்டின் ஆட்சி களக்காடுவரை பரவியிருந்தது. இதன் எல்லையில் கல்லிடைக்குறிச்சியும் அடங்கும்.

இக்கல்வெட்டில் 'இந்த உட்பிரிவினர் தமிழ்மக்களுடன் மண உறவு வைத்துக் கொள்ளக்கூடாதென்றும் உள்ளது; ஆகவே இவர்கள் மலையாளிகளுடன் உறவுகொள்ளத் தவறில்லை என்றாகிறது. எனவே இந்த உட்பிரிவினரை மலையாளச் சார்புடைய – திருவிதாங்கூரின் வட

பகுதியிலிருந்து குடிபெயர்ந்தவர்கள் என்று கருதலாம்.

இந்தக் காலத்தில் வேணாட்டரசன் யாரென்று தெரியவில்லை. ஆனால் நாட்டில் நிச்சயமற்ற சூழல் இருந்திருக்கிறது. குறிப்பிட்ட சாதியினர் தலையெடுத்து உட்பிரிவினரை விலக்கிவைக்கும் அளவுக்கு சாதி ஆதிக்கம் இருந்திருக்கிறது. (*T.K. Velupillai, Travancore State manual Vol II 1943 P 127-131)* என்பதும் தெரிகிறது.

இதுபோன்ற விஷயங்களை ஒரு சாதியில் அதன் உட்பிரிவினரும், அடிமையாக நடத்தப்பட்டதற்கான அடையாளமாகக் கருதலாம். கல்லிடைக்குறிச்சி கல்வெட்டில் கணக்கு கோளரி அய்யப்பன், அய்யப்பன் குமாரன், அண்டூர் செழியங்கன் எனும் மூன்று பேரையும் கொன்று பரிகாரம் செய்யுமாறு குறிப்பிடப்பட்ட செய்தி உள்ளது. (மேற்படி எண் **219)**

இக்கல்வெட்டு கூறும் செய்திகளின் அடிப்படையில் இப்போது இந்த உட்பிரிவினரை அடையாளங்காண முடியவில்லை.

## நாடாரின் மேலான நிலை

தொல்லியல் அலுவலரும் மிகச் சிறந்த ஆய்வாளரும் ஆன எஸ். இராமச்சந்திரனும், அ. கணேசன் என்பவரும் இணைந்து எழுதிய 'தோள்சீலைக் கலகம் தெரிந்த பொய்கள் தெரியாத உண்மைகள்' **(2010)** என்ற நூலில் முக்கியமான சில கருத்துகள் வருகின்றன. இவை வருமாறு:

நாடார்சாதியினரில் தென் தமிழகத்தில் நாட்டு நிர்வாகத்திலும், வரிபிரிக்கும் பொறுப்பிலும் இருந்தவர்கள் என்பது பற்றிய செய்திகள் கிடைக்கின்றன. இவர்கள் தமிழகத்தில் நாட்டு நிர்வாகத்திலும் வரிபிரிக்கும் பொறுப்பிலும் இருந்தனர். இவர்களில் குறுநிலத் தலைமைப் பொறுப்பில் இருந்தவர்களும் உண்டு.

திருநெல்வேலி, தென்காசிப் பகுதிகளில் மட்டுமே செல்வாக்குடையவர்களாய் இருந்த பாண்டியர்கள் நாடாழ்வார் என அழைக்கப்பட்டிருக்கின்றனர். பிற்காலச் சோழர் காலத்தில் இப்பகுதியில் குடியேறிய பல தலைமுறைகளாய் வேரூன்றி வாழ்ந்த வலங்கை உய்யக்கொண்ட ரவிகுல சத்திரிய வம்சத்தவர்கள் நாடார்களே. இவர்களுடன் பாண்டிய வம்சத்தினர் உறவு கொண்டிருந்தனர். (மேற்படி நூல் ப. **24)**

வேணாடு அரசர்கள் காலத்தில் இவர்கள் குறுநிலத்தலைவர்களாய் இருந்தனர். நாகர்கோவில் நாகராஜா கோவில் முன்மண்டபத்தைக் குலசேகரப்பெருமாள் கொன்றை மாலை கட்டினார். இவர் நாடார் குலத்தவர் ஆவார். (மேற்படி 62, 68)

இப்படியான பல உண்மைகளை மறைத்து நாடார்களை இழிவாக எழுதினார்கள் அயல்நாட்டு மிஷனரிகள். இவர்களில் வேறுபட்டவர், ரெவரென்ற் சற்குணம் வின்ஃபாரெட் அய்யர் என்பவர். இவர் எழுதிய 'சான்றோர்குல மரபுகள்' என்ற நூல் (1870) முக்கியமானது. இது முந்தைய கால மிஷனரிகள் கூறிய பல பொய்ச்சான்றுகளைத் தகர்க்கும் ஆற்றலுடைய அடிப்படையில் எழுதப்பட்டது (மேற்படி 2010 ப 28).

நாடார் சமூகத்தினர் பிற்காலச் சோழர் காலத்திலும் பாண்டியர் காலத்திலும் வேணாட்டு அரசர்கள் காலத்திலும் மேலான இடத்தில் இருந்ததைக் கல்வெட்டுச் சான்றுகள் வழி விளக்க முடியும் (மேற்படி நூல்).

## கதைப்பாடல்களில் தேடலாம்

இராமச்சந்திரனின் கருத்தை வலியுறுத்துவதற்கு மேலும் சான்றுகளை நாட்டார் வழக்காற்றியல் வகைமைகளில் தேட முடியும். குறிப்பாக வில்லிசை, களியல் ஆட்டம் ஆகிய கலைகளில் பாடப்படுகின்ற கதைப்பாடல்களை முழுவதும் ஆராய்ச்சிக்கு உட்படுத்தினால் புதிய வெளிச்சத்தைப் பாய்ச்ச முடியும்.

அச்சில் வந்ததும் வராததுமான கதைப்பாடல்களில் சிதம்பர நாடார்கதை, ஐவர் ராசாக்கள் கதை, வலங்கை நூல்கதை, பூலங்கொண்டாள் கதை, ஆந்திரமுடையார் கதை, குமாரசாமிகதை, காணி சாவு, கட்டிலவதானம், சேர்வைக்காரன் கதை, ஓட்டன்கதை என்னும் சிலவற்றை உதாரணமாகக் கூறலாம்.

இந்தக் கதைப்பாடல்கள் நாடார் சமூகத்தின் மேலான நிலையை வெளிப்படையாகக் கூறுகின்றன. சில மேம்போக்காகவும் மறைமுகமாகவும் பேசுகின்றன. வழக்காற்று வகைமைகள் முழுதும் ஆய்வுக்கு உட்படுத்தப்படவில்லை. இவற்றையெல்லாம் தொகுத்து ஒரு வரலாற்றை உருவாக்கலாம்.

## சரலூர் கல்வெட்டு

'செம்பவளம் ஆய்வுத்தளம்' தலைவர் செந்தீ நடராசன் நாகர்கோவிலில் சரலூர் என்ற இடத்தில் உள்ள ஒரு கல்வெட்டை அடையாளம் கண்டு பதிப்பித்திருக்கிறார். 43வரிகள் கொண்ட இக்கல்வெட்டு இப்போது கன்னியாகுமரி அருங்காட்சியகத்தில் பாதுகாப்பாக உள்ளது.

தமிழ் எழுத்தில் அமைந்த இக்கல்வெட்டு வேணாட்டு அரசன் வீர கேரளவர்மனின் காலத்தது. (கி.பி. 1697) கண்ணன்கரை என்ற கிராமத்தைச் சார்ந்த நாடார் செல்வர் ஒருவருக்கு குலசேகரன் என்னும் அரச மரபுப் பெயரைச் சூட்டியதும், ஆறில் ஒரு பகுதி கிரையம் கரைப்பணம் அரச வருவாயாகக் கொடுத்ததும் ஆகிய செய்திகள் இக்கல்வெட்டில் காணப்படுகின்றன. வேணாட்டு அரசன் நாடார் பிரமுகர்களைப் பாராட்டிய செய்திகள் அடங்கிய கல்வெட்டுகள் வேறு பலவும் கிடைக்கலாம் (ஆவணம் எண் 15 ப 110).

## பிச்சைக்காலன் கதை

பிச்சைக்காலன் கதை என்ற வில்பாட்டின் மூலம் மட்டும், கலை நிகழ்வின் அடிப்படையில் அச்சில் வந்திருக்கிறது. இந்த வில்லுப்பாட்டுக் கதை ஏடு நூலாசிரியரிடம் உள்ளது. தென் திருவிதாங்கூரில் நாடார்கள் பெரும் மிராசுதார்களாக இருந்ததற்குச் சரியான வழக்காற்றியல் சான்று பிச்சைக்காலன் கதை.

இந்தக் கதை இப்போதும் வில்லிசை நிகழ்ச்சியில் பாடப்படுகிறது. நாஞ்சில்நாட்டில் வடக்கு சூரன்குடி ஊரில் பிச்சைக்காலன் என்ற நாட்டார் தெய்வத்திற்குக் கோவில் உள்ளது. இக்கோவில் கொடைவிழாவில் இக்கதை முழுதும் பாடப்படுகிறது. இது 2770 வரிகள் கொண்ட அம்மானைப் பாடல்.

திருநெல்வேலி மாவட்டம் மணியாச்சி ஊரில் (கதைப்படி மணிக்காஞ்சி) மறவர் குலத்து மாடப்பன் முக்கிய பிரதானியாக இருந்தான். அவனது மனைவி பிச்சம்மா. இவர்களுக்கு அரிதிப்பிள்ளை, பிச்சக்காலன் என்னும் இரண்டு மக்கள் உண்டு. ஒருமுறை மணியாச்சி மறவர்கள் சிலர் மாடப்பனைத் தங்களுக்குப் போட்டியாக நினைத்துக் கொன்றுவிட்டனர்.

பிச்சம்மா அனாதை ஆனாள். மணியாச்சியில் இருக்க விருப்பமின்றித் தன் மக்களுடன் நாஞ்சில்நாட்டிற்கு வந்தாள். கோட்டாற்றில் நிலப்பாறை பணிக்கர் என்பவரைக் கண்டாள். தன் கஷ்டத்தைச் சொன்னாள். அவர், "சூரை நகர் (இன்றைய வடக்கு சூரன்குடி) ஊரில் வாழும் ஸ்ரீரங்கம்

**சேனைக்குட்டி நாடார் என்னும் நிலச்சுவான்தாரிடம் போ; ஆதரிப்பார்; அவர் பண்பாளர்; இரக்கம் உடையவர்; மிகப் பெரிய செல்வந்தர்" என்றார்.**

**பிச்சம்மா, சேனைக்குட்டியிடம் அடைக்கலமானாள். அவருடைய மொத்த சொத்துக்களைப் பிச்சைக்காலன் நிர்வகிக்கும் அளவுக்கு நிலை வந்தது. இதனால் பொறாமை கொண்ட சிலர் பிச்சைக்காலனைக் கொல்லும்படியான சூழ்நிலையை உண்டாக்கினர். அவன் கொல்லப்பட்டபின் சிவனிடம் வரம் வாங்கித் தெய்வமானான்.**

**கதைப்பாடல் ஆசிரியர் ஸ்ரீரங்கம் சேனைக்குட்டி நாடாரை அறிமுகப்படுத்தும் போது**

சூரநகர் ஆனதிலே சிறந்த பண்ணை நாடாளும்
பத்திரமா காளியருள் பாருலகில் பெரியவர்தான்
சேத்திரமும் பண்ணையாரும் திரவியத்தில் மிகுந்தவர்தான்
ஸ்ரீரங்கம் சேனைக்குட்டி சிறந்த நல்ல நாடாரும்
அதிரும் சேனைக்குட்டி நாடார்
குதிரைகளைக் கட்டி அரசாளும் பெரிய நல் நாடாரும்

(பிச்சைக்காலன் கதை ஏடு)

**இப்படியே வர்ணனை போய்க்கொண்டிருக்கிறது. சேனைக்குட்டி நாடார், தாம் இருந்த பகுதியில் சட்டம் ஒழுங்கையும் கவனித்திருக்கிறார்.**

**இந்தக் கதை நடந்த காலத்தை அறிய நூலிலே சான்று உள்ளது. கன்னியாகுமரி தீர்த்தக்கட்டத் துறையில் உள்ள சங்கிலித்துறை பற்றிய குறிப்பு கதைப்பாடலில் வருகிறது. கி.பி. 1881ஆம் ஆண்டு பொதுப்பணித்துறை அறிக்கை சங்கிலித்துறை பழுது பார்க்கப்பட்ட செய்தியைக் கூறுகிறது (குமரி தேவசம் மராமத்து அறிக்கை 1962 ப. 222). இதனால் பிச்சைக்காலன் கதை 1881ஆம் ஆண்டுக்கு முற்பட்டது என்று கூற முடியும்.**

**இக்கதைப் பாடலில் வரும் பிச்சம்மா நாஞ்சில்நாட்டிற்கு வரும்போது புத்தனாற்றைத் தாண்டி வருவதாகச் செய்தி உள்ளது. பழையாற்றில் ஒரு கிளையில் புத்தனாறு கட்டப்பட்டது 1745ஆம் ஆண்டு (செ. சதாசிவம் 1949 பக். 100– 101). எனவே இக்கதை 1750க்கும் 1825க்கும் இடைப்பட்ட காலத்தில் நடந்தது எனக் கூறலாம்.**

**இந்தக் கதைப்பாடல் வழி ஒரு விஷயம் தெளிவாகிறது. பதினெட்டாம்**

நூற்றாண்டில் நாஞ்சில்நாட்டில் நாடார் சமூகத்தில் பெருமளவு நிலமுள்ள நிலச்சுவான்தார்கள் வாழ்ந்தார்கள். அவர்கள் திருவிதாங்கூர் அரசியல் நிர்வாகத்துடன் தொடர்பு கொண்டிருந்தார்கள் என்று நிறுவலாம்.

## பூலங்கொண்டாள் கதை

திருநெல்வேலி மாவட்டம் கல்லிடைக்குறிச்சி நாடார் சாதி மக்களில் சீராக வாழ்ந்த மாலைக்குட்டி நாடாரின் குடும்பம் ஏதோ காரணத்தால் நாஞ்சில் நாட்டிற்குக் குடிபெயர்ந்தது. இவர்கள் நாஞ்சில்நாட்டு அகஸ்தீஸ்வரம் வந்து பாழ்நிலத்தைப் பண்படுத்தித் தோட்டம் அமைத்து வீடுகட்டி வாழ்ந்துவந்தனர். இவரது வம்சாவழியில் வந்த மாலைக்குட்டி நாடாருக்குப் பூலங்கொண்டாள் என்ற ஒரு பெண்ணும் ஏழு அண்ணன்மார்களும் உண்டு.

ஒருமுறை பூலங்கொண்டாள் கொட்டை நூற்க ராட்டை வேண்டும் என்று அண்ணன்மார்களிடம் கேட்டாள். அவர்கள் ராட்டு வாங்கத் திங்கள்சந்தை ஊருக்குப் போனார்கள். வழியில் கண்டியூர்க்காரர்கள் இருவரைச் சந்தித்தனர். அவர்களிடம் பூலங்கொண்டாளைப் பற்றிப் பெருமையாகப் பேசினர்.

சிலநாட்கள் கழிந்து ஒருநாள் கண்டியூர்க்காரர்கள் பூலங்கொண்டாளைப் பெண் கேட்டு வந்தனர். மாலைக்குட்டி நாடார் “எங்கள் குலம் பூர்வீகமாய் வயல், தோப்பு, குளம் எனக் கொடிகட்டிப் பறப்பது. அரசு செல்வாக்கும் உண்டு; எங்கள் தகுதிக்கு நீ பெண் பார்க்க வரலாமா” என்று கேட்கிறார். கண்டியூர்க்காரர்கள் பூலங்கொண்டாளை வஞ்சகமாகக் கொன்றுவிடுகின்றனர். அவள் பின் தெய்வமானாள்.

பூலங்கொண்டாளின் முன்னோர்கள் கல்லிடைக்குறிச்சியிலிருந்து அகஸ்தீஸ்வரத்தில் குடியேறியது 1674 என நூல் கூறும் (கு. ஆறுமுகப்பெருமாள் நாடார் 1977 ப. 2). பூலங்கொண்டாள் கதையில் தோட்டுக்காரி அம்மன் கதைக்குறிப்பு வருகிறது. தோட்டுக்காரி அம்மன் கதையின் காலம் கி.பி. 1776 (அ.கா. பெருமாள் 1987 ப. 132). எனவே அதற்கு முற்பட்டது பூலங்கொண்டாள் கதை. இதனால் இக்கதைப் பாடல் நிகழ்ச்சிகள் பதினெட்டாம் நூற்றாண்டு ஆரம்பத்தில் நடந்திருக்கலாம்.

எனவே அந்த நூற்றாண்டில் நாஞ்சில்நாட்டு அகஸ்தீஸ்வரம் பகுதியில் நாடார் சமூக மிராசுதார்கள் வாழ்ந்தரென்று சொல்ல முடியும்.

## ஓட்டன்கதை

அனுஷம் திருநாள் மார்த்தாண்டவர்மா என்ற அரசர் திருவிதாங்கூர் ராஜ்யத்தை ஒருங்கிணைத்தவர் **(1729– 1758).** இவரது தாய்மாமா ராமவர்மாவின் மக்கள் பத்மநாபன் தம்பி, இராமன் தம்பி ஆகிய இருவரும் மார்த்தாண்டவர்மாவை எதிர்த்து வாரிசுரிமை வேண்டிக் கலகம் செய்தனர்.

இந்த உள்நாட்டுப் போரில் அனுஷம் திருநாள் அரசருக்கு ஆதரவாக அனந்த பத்மநாடார் என்ற வீரர் உதவினார். இவருக்குக் களரிப்பயிற்றி மாங்குடி ஆசான், சிலம்பவீரர் சிதம்பர நாடார் போன்றோர்கள் ஆதரவாய் இருந்தனர்.

பொத்தையடி தாணுமாலய நாடார் என்ற நிலச்சுவான்தார் மார்த்தாண்டவர்மாவிற்கு அடைக்கலம் கொடுத்தார். ஓட்டன் என்பவன் ஊரூராய் அலைந்து மார்த்தாண்டவர்மா போல வேடமிட்டு, எதிரிகளிடம் இருந்து அவரைக் காப்பாற்றினார். இதனால் இவர் கொலைப்பட்டார். இந்தச் செய்திகள் தம்பிமார்கதை, ஓட்டன் கதை, ஏட்டுவடிவில் உள்ள எட்டுக் கூட்ட தம்புரான் கதை ஆகிய வில்லிசைப் பாடல்களில் வருகின்றன.

மார்த்தாண்டவர்மாவின் வாரிசுரிமைப்போர் **1731**க்கு முன்பே ஆரம்பித்துவிட்டது *(K.V. Krishna Ayyar 1967 P. 99-100)* . இதனால் அந்த நூற்றாண்டின் ஆரம்பத்திலேயே நாடார் குலப் பிரமுகர்களில் பலர் நிலச்சுவான்தர்களாயும், அரசியல் சார்பில் உதவும் அளவுக்குத் தகுதி படைத்தவர்களாயும் இருந்தனரென்று தெரிகிறது.

தனக்காக உயிர்விட்ட ஓட்டனுக்கு அரசர் மார்த்தாண்டவர்மா கோவில் எடுத்திருக்கிறார். நாகர்கோவில் கன்னியாகுமரி சாலையில் பொத்தையடி ஊரில் இக்கோவில் உள்ளது. அறநிலையத் துறையின் கீழுள்ள இந்தக் கோவிலில் இப்போதும் வழிபாடு நடக்கிறது.

## சிதம்பரநாடார் கதை

நாகர்கோவில் மணக்குடிச் சாலையில் எட்டு கி.மீ. தொலைவில் உள்ள புத்தளம் ஊரில் சிதம்பரநாடார் என்னும் மிராசுதார் இருந்தார். இவரைப் பற்றி ஒரு கதைப்பாடல் உள்ளது. இவர் புத்தளம் பகுதியில் வரிப்பிரிக்கும் உரிமையுடையவர்; செல்வந்தர்; வீரர்; மந்திரம் மருத்துவம் அறிந்தவர்; முன்சி என்ற பட்டம் உடையவர். இப்படியான பன்முகத் தன்மையுடையவர்.

சிதம்பரநாடார் பாம்பு கடித்து இறந்த பிராமணப் பெண்ணை மீட்டுத் திருமணம் செய்து கொண்டார். இதனால் கொலைப்பட்டுத் தெய்வமானார். இப்போதும் இவருக்கு வழிபாடு நடக்கிறது. இந்தக் கதை நடந்த காலத்தை அறிய நூலில் சான்றுகள் உள்ளன.

சிதம்பரநாடார் கதையில் ஓட்டனுக்குக் கோவில் எடுக்கப்பட்ட செய்தி வருகிறது (அ. தங்கதுரை 1982 ப. 9). இது 1731க்கும் 1740க்கும் இடைப்பட்ட காலத்தில் நடந்திருக்கலாம். அகஸ்தீஸ்வரம் கு. ஆறுமுகப் பெருமாள் நாடார் வீட்டில் இருந்த சிதம்பர நாடார் கதை ஓலைப்பிரதி கி.பி. 1818இல் பிரதி செய்யப்பட்டது என உள்ளது. இப்போது இப்பிரதி தஞ்சை தமிழ்ப் பல்கலைக் கழகத்தில் உள்ளது.

சிதம்பரநாடாரைக் கொல்ல வேண்டாம் என்ற உத்தரவைக் கொண்டுவந்த தூதன் பத்மநாபபுரம் நகரம்வழிவருவதாகக் கதைப்பாடல் கூறும். பத்மநாபபுரம் திருவிதாங்கூரின் தலைநகராக இருந்தது 1790 வரை *(Balachandran 1974 P 23-24)* . எனவே சிதம்பரநாடார் கதை நிகழ்ச்சிகள் 1750– 90ஆம் ஆண்டுகளில் நடந்திருக்கலாம்.

இதன்படி பதினெட்டாம் நூற்றாண்டின் பாதியில் நாடார் சமூகத்தினர் நாஞ்சில் நாட்டில் மிராசுதார்களாகவும் வரிவாங்கும் உரிமையுடையவர்களாகவும் பல்துறை நிபுணர்களாகவும் இருந்திருப்பது வெளிப்படையாகவே தெரிகிறது.

## வலங்கைநூல் கதை

பிற்காலச் சோழர்களுக்கும் நாடார் சமூகத்துக்கும் உள்ள தொடர்பு கல்வெட்டுகளிலோ செப்பேடுகளிலோ பதிவு செய்யப்படவில்லை. ஆனால் தென்மாவட்ட நாட்டார் வழக்காறுகளில் குறிப்பாகக் கதைப்பாடல்களில் இது குறித்த செய்திகள் வருகின்றன; ஆறு கதைகளும் உள்ளன.

இந்தக் கதைப்பாடல்கள், வலங்கை நூல் கதை என்னும் மாகாளி அம்மன் கதை (கு. ஆறுமுகப் பெருமாள் நாடார் 1968), வலங்கை நூல் என்னும் வெங்கலராசன் காவியம் (ஆறுமுகப்பெருமாள் நாடார் 1979), வலங்கை வாழ்த்து (தென்காசி 1956), பத்திரகாளி கதை (நடராசன் 1980), சப்த கன்னியர் கதை (ஏட்டு வடிவம்), வலங்கையர் வரலாறு (ஏடு), *The Dateless muse (A.K. Perumal 1988)* ஆகியன.

இரண்டாம் குலோத்துங்கன் காலத்தில் (1071) நாடார் குடும்பங்கள் சில சோழநாட்டிலிருந்து குடிபெயர்ந்தன. அப்போது நடந்த வலங்கையர்

கலகம் பற்றிச் சோழர் கல்வெட்டுகளில் குறிப்புகள் உள்ளன. இக்காலத்தில் வலங்கையர் சிலர் தென்பாண்டி நாட்டுக்குக் குடிபெயர்ந்தனர். இதற்குக் காவிரிப் பெருக்கெடுப்பில் மண்சுமத்தல் தொடர்பான காரணக்கதை கூறப்பட்டது. வலங்கைகதையிலும் இது வருகிறது.

இப்படி குடியேறிய குடும்பங்களில் ஒன்று ஈழநாட்டிற்குச் சென்றது. அங்கே இரும்பைப் பொன்னாக்கும் வித்தையை அறிந்து சம்பாதித்த செல்வத்துடன் தென்திருவிதாங்கூருக்குத் திரும்பியது. அக்குடும்பத்தில் ஒருவர் இங்கு கோட்டைகட்டிக்கொண்டு வெங்கலராசன் என்னும் பெயருடன் குறுநிலத் தலைவராக இருந்தார். இவருடன் மணஉறவுகொள்ள வேணாட்டு அரசன் விரும்பினான். அது நடக்காததால் வெங்கலராசன் கோட்டை அழிந்தது. கதை இப்படியே போகிறது.

இதுபோன்ற நாட்டார் வழக்காற்றுத் தகவல்கள் தென்திருவிதாங்கூரில், நாடார் சாதியினர் உயர்நிலையில் இருந்ததைக் காட்டுகின்றன.

தென்தமிழகத்தில் இப்போது கிடைக்கின்ற அச்சில் வந்த, வராத கதைப்பாடல்கள் முழுவதையும் ஒருசேரவைத்து ஆராய்ந்தால் நாடார்களின் மேலான நிலையை அடையாளம் காணமுடியும். மிஷனரிகளின் தகவல்களில் பல சரியானவை அல்ல புனைந்துரை என்பது புரியும். இராமச்சந்திரனின் கருத்துகளுக்கு இவை மேலும் அரண் சேர்க்கும்.

## கதைப்பாடல்களில் சாதி

சாதிய அடுக்குமுறையின் காழ்ப்பு பற்றிய செய்திகள் தென்தமிழ்க் கதைப்பாடல்களில் பரவலாகக் காணப்படுகின்றன. தென்மாவட்டங்களில் ஜாதிய உணர்வு அதிகம் என்ற இன்றைய போக்கை 17, 18ஆம் நூற்றாண்டுக் கதைப்பாடல்களில் தேடமுடியும்.

அடுத்த சாதிக்குப் பெண் கொடுக்க மறுத்தல், கலப்பு மணத்தை எதிர்த்துக் கலகம் செய்தல், ஒருவரைச் சந்திக்கும் போது சாதியைக் கேட்டல் என்னும் நடைமுறைகளின் செய்திகள் வில்லிசைப் பாடல்களில் உள்ளன.

பெண் கொடுக்க மறுக்கும் செய்திகள் தொடர்பாக ஆந்திரமுடையார் கதை, ஐவர் ராசாக்கள் கதை, பலவேசம் சேர்வைக்காரன் கதை, பிச்சைக்காலன் கதை, பூலங்கொண்டாள் கதை, முத்துப்பட்டன் கதை, வெங்கலராசன் கதை, புலமாடன் கதை, தடிவீரய்யன் கதை,

தோட்டுக்காரியம்மன் கதை என இருபதுக்கும் மேற்பட்ட கதைகள் உள்ளன.

ஒருவனை இன்னொருவன் வழியில் சந்திக்கும் சமயத்தில் ஊர், பெயர் போன்றவற்றைக் கேட்கும்போது சாதி என்ன என்று கேட்பதுவும் தவறாகக் கருதப்படவில்லை (லாறன்ஸ் நாயகம், வன்னிராசன் கதை 1977 பக். 114– 121).

ஏட்டுவடிவில் இருக்கும் 'கட்டிலவதானக் கதைப்பாட'லில் ஒரு நிகழ்ச்சி. இசக்கி என்ற யட்சி ஒருவரைக் கொன்றுவிடுகிறாள். அந்தச் செய்தியைக் கேட்ட ஒருவர், இறந்தவரின் உறவினரிடம் சொல்லுவதற்கு ஓடிப்போகிறார். அப்போது ஒருவர் அவரை வழி மறித்து,

என்ன சாதி சொல்லுமையா
இந்த முடுக்குவழி போகலாமா
சாதிபேர் தெரியாமல் இந்த ஊரில் நுழையலாமா,

என்று கேட்டுக்கொண்டே போகிறார். இதுபோன்ற நிகழ்ச்சி பிச்சைக்காலன் கதையிலும் வருகிறது.

குறவர், முக்குவர், வண்ணார், நாவிதர் போன்ற சாதியினரைப் பொதுவாக எல்லாச் சாதியினரும் தீண்டாதவர்களாகவே கருதினர் என்பதற்குக் கதைப்பாடல்களில் சான்றுகள் உள்ளன. (தொ– ர் கு. ஆறுமுகப் பெருமாள் நாடார், 'வள்ளியம்மன் கதை', யு.ஜி. பிரகாஸ் பதிப்பகம், நாகர்கோவில் பக். 12; கு. ஆறுமுகப்பெருமாள் நாடார், 'முத்தாரம்மன்கதை' 1978 ப. 64; கு. ஆறுமுகப் பெருமாள் – 'பார்வதி அம்மன் காவியம்' 1979 ப. 15)

அச்சில் வந்தவற்றில் மட்டுமல்ல, ஏட்டு வடிவிலுள்ள பல கதைப்பாடல்களில் இதைத் தேடமுடியும்.

புலமாடன் கதையின் தலைவன் வண்ணார் சாதியைச் சேர்ந்தவர். இவரை அறிமுகப்படுத்தும்போதே கதைப்பாடல்

சீர்சிறந்த மணப்பாட்டுத் தேசந்தன்னில்
தீண்டாத சாதியிலே உதித்த வீரர்

எனக் கூறும்.

பிச்சைக்காலன் கதையில் ஒரு நிகழ்ச்சி. மறவர் சாதியைச் சார்ந்த பிச்சைக்காலன், நிலம் மேற்பார்வை விஷயமாக, தன் தலைவன்

**நாடாருக்குச் செய்தி அனுப்புகிறார், அதைக் கொண்டு செல்பவர் நாவிதர் சாதியினர். அவர் நாடாரிடம் சென்று செய்தி சொல்லி சீட்டைக் கொடுத்தான்**

நாடாரும் தான் பார்த்து
நல்ல பிச்சைக்காலனுக்கு
நாட்டமுடன் காலம் தப்பிப் போச்சு
நாவிதனைத் தூதுவிட்டார்
வாடாத மறத்தி மகன் வல்லவன்
வழிதவறிவிட்டான்
நாவிதனை நாடானுக்கு தூதனுப்ப
எப்படித்தான் புத்தி வந்து . . .

**என பிச்சைக்காலன் ஏடு கூறும்.**

**தீண்டப்படாதவர்களில் முக்குவர் முதலான சாதிகளின் பட்டியல் விரிவாக உள்ளது. இவர்கள் எல்லாரையும் விட பறையர்கள் இழிவானவராகக் கருதப்பட்டனர். இதற்குக் கட்டிலவதானம் என்னும் 'மேலாங்கோட்டு கதைப்பாட'லில் சான்று உண்டு.**

**குறுப்பு சாதியினர் இசக்கி குடியிருந்த மரத்தை வெட்டிக் கட்டில் செய்கிறார்கள். அந்தக் கட்டிலில் இசக்கி குடியிருக்கிறாள். அதில் படுத்தவர்கள் அகால மரணமடைகிறார்கள். அதனால் அந்தக் கட்டில் கைமாறிக் கைமாறிப் புத்தளம் ஊர் நாடார் ஒருவரிடம் வருகிறது. அவர் வீட்டிலும் கட்டிலில் படுத்த ஒருவர் இறக்கிறார். இதனால் புத்தளம் நாடார் கட்டிலைத் தந்திரமாகச் சந்தையில் விற்கத் திட்டம் போடுகிறார்**

புத்தளத்து நாடார்கள் ஒன்றாய் கூடி
பள்ளர் பறையர்களை அடிமையாக்கி
கட்டிலைச் சுமந்துவர அடித்துக் கூறி
பறைச்சாதி சுமந்த கட்டில் தீண்டு வாரோ
என்று ஒரு முன்குடுமி நாடார் கேட்டபோது
இன்னொருவர்
கடல் தண்ணி கொண்டு வந்து கட்டிலின் மேல்
தெளித்து காயவைத்து பூசை போட்டால்
புனிதமாய் ஆகிவிடும் . . .

**என்கிறார்.**

இதுபோன்ற செய்திகள் கதைப்பாடல்களில் உள்ளன. இவற்றை முழுவதும் தொகுத்தால் ஒரு பண்பாட்டு வரலாற்றை எழுத முடியும். இந்தப் பின்னணியில் அடிமை முறையைப் பார்க்க வேண்டும்.

## அடிமையாகக் காரணம்

தமிழக, கேரள வரலாற்றுப் பண்பாட்டாய்வாளர்கள், ஒருவன் அடிமையாவதற்குத் தீண்டாமை முக்கிய காரணமாக இருந்ததென்று கூறுகின்றனர். ஆனால் முதலியார் ஆவணங்கள், கல்வெட்டுகள், கதைப்பாடல்கள்வழி பார்க்கும்போது அடிமையாவதற்குத் தீண்டாமை மட்டுமல்ல வேறு காரணங்களும் உள்ளனவென்று அறிந்துகொள்ளலாம். ஒருவன் தன்னைத்தானே அடிமையாக்கிக் கொள்வதற்குக் கீழ்க்காணும் காரணங்களும் உண்டு. அவை:

1. பொறுக்க முடியாத வறுமை
2. கடன் வாங்கிய தொகையைத் திருப்பிக் கொடுக்க முடியாத சூழல்
3. வேறு ஊர்களிலிருந்து குடிபெயர்ந்தபோது ஆதரவற்று நிற்கும் நிலை
4. ஏற்கெனவே ஒருவனிடம் அடிமையாக இருந்து பிறரிடம் விற்கப்படும் வழிமுறை
5. ஒருவர் தன் மகள் அல்லது தங்கைக்குக் கொடுக்கும் ஸ்ரீதன நிலங்களில் வேலை செய்ய ஒருவரை அடிமையாக்குதல்
6. ஜாதிப் பிரஷ்டம் (சாதி விலக்கு) செய்யப்பட்ட ஆண் அல்லது பெண் தன்னை வீட்டு உள் வேலைகளுக்கு அடிமையாக விற்றுக் கொள்ளல். (இது குறிப்பிட்ட சாதிகளுக்கே உரியது)

ஆகியன.

பறையர் அல்லாத சாதியினரில் சிலர் வீட்டு உள்பகுதி வேலைகளுக்காக அவரது சாதியினரின் வீட்டில் அடிமையாக விற்கப்பட்டுள்ளனர். இச் செய்திகள் வெள்ளாட்டி ஆவணங்களில் உள்ளன (இது பெரும்பாலும் ஸ்ரீதன ஓலைச் செய்தி). இது வெளிப்படையாகப் பேசவில்லை. ஆனால் நாட்டார் வழக்காறுகள்வழி இச் செய்திகள் கிடைக்கின்றன.

முதலியார் ஓலைகளில் மிகப் பழமையான அடிமை ஓலை 1459 ஆண்டினது. இன்றைய திருநெல்வேலி மாவட்டம் சேரன்மாதேவி ஊர்ச்

சேரியில் வாழ்ந்த பறையர் அடிமை பற்றி இந்த ஓலை கூறுகிறது. ஒரு குடும்பத்தில் அவையன், தடியன், நல்லி ஆகிய மூன்றுபேரும் தங்களை விற்றுக்கொண்டனர் என்று கூறும். இவர்களை வாங்கியவர்கள் கன்னியாகுமரி மாவட்டம் கல்குளம் வட்டம் இரணியல் ஊரைச் சார்ந்த ராமன் அய்யப்பன் ஆவார்.

இந்த ஆவணத்தின் முதல் பகுதி வருமாறு: "நாங்கள் அவகால பஞ்சமாய் காலும் கெண்டையும் வீங்கிக் கஞ்சிக்கு அலகையில் நாங்களாக எங்களை விற்றுக்கொண்டோம்" என வருகிறது. இது பிரமாணமாகவும் பதிவு செய்யப்பட்டிருக்கிறது. இந்த அடிமைகள் மூவரும் எழுதப்படிக்கத் தெரியாதவர்கள். அதனால் செங்குந்த முதலியார் சாதியினரான பெருமாள் என்பவர் பிரமாணத்தை எழுதியிருக்கிறார். சிலர் சாட்சிக் கையெழுத்துப் போட்டிருக்கின்றனர்.

இந்த ஆவணம் எழுதப்பட்ட காலத்தில் சேரன்மாதேவி வேணாட்டு அரசின் பகுதியாக இருந்ததால் இவர்கள் தங்களை விற்றுக்கொள்ளுவதற்கு இரணியல் சந்தைக்கு (கல்குளம் வட்டம்) வந்திருக்கின்றனர். இவர்களை வாங்கியவர்கள் நாயர் அல்லது செட்டு சாதியினராக இருந்திருக்கலாம். இவ்வூரில் இவர்களே செல்வாக்குடைய சாதியினராக இருந்தனர்.

இந்த ஆவணத்தில் அடிமைகள் பறையர் எனச் சொல்லப்பட்டாலும் இவர்களில் அவையன் என்னும் பெயருடையவரின் தந்தை சோழ கேரளச் சாம்பான் என்று குறிப்பிடப்படுகிறார். பறையர், சாம்பவர் இருவரும் வேறுவேறு சாதியினர். தங்களுக்குள் கொள்வினை கொடுப்பினை இல்லை என்று வெளிப்படையாகவே சொல்லி வருகின்றனர்.

முதலியார் ஆவணங்களில் சாம்பவர் அடிமையாக விற்கப்பட்டது குறித்த வேறு ஆவணங்கள் கிடைக்கவில்லை. பறையரில் அவையன் சோழ கேரளச் சாம்பான் மகன் என வருவதால் சாம்பான் என்பது சாதிப்பெயர் அல்ல என ஊகிக்கலாம். இது உறுதியான கருத்து அல்ல.

கி.பி. 1472ஆம் ஆண்டு முதலியார் ஆவணம் ஒன்று பறையர் சாதியினர் ஒருவர் அடிமையானதற்கு வித்தியாசமான காரணத்தைக் கூறுகிறது. நாஞ்சில் நாட்டில் தோவாளை வட்டத்தில் பிராமணர்களுக்காகத் தானம் விடப்பட்ட புதுக்கிராமம் என்ற ஊர் உள்ளது. இதன் பழைய பெயர் இராஜராஜச் சதுர்வேதி மங்கலம்.

இந்த ஊரில் இருங்கிண்டிப் பிள்ளை அப்பாபிள்ளை என்பவர்

இருந்தார். இவரிடம் கன்னியாகுமரி மாவட்டம் கல்குளம் வட்டம் உள்ள ஆளுர் என்ற ஊரில் வாழும் பறையர் சாதியினரான அணுயத்தி மகன் ஆதி என்பவன் பத்து கலியுகராமன் பணம் கடன் வாங்கியிருந்தார்.

இந்தப் பணத்திற்கு ஒரு பூவிற்கு ஒன்றேகால் கோட்டை நெல் பலிசை (வட்டி) கொடுக்க வேண்டும் என்பது நிபந்தனை. இந்தப் பலிசையை ஆதி ஒழுங்காகக் கொடுக்கவில்லை. அதனால் பணம் கொடுத்தவர் ஆதியை நெருங்கினார். ஆதிக்கு வேறு வழியில்லை. அப்பாபிள்ளையிடம் சொந்த மகனை ஒற்றிவைத்தார்.

ஒற்றிவைக்கப்பட்ட பொருளை ஒற்றி வாங்கியவர் எப்படியும் பயன்படுத்தலாம் என்னும் பொதுவிதிப்படி ஆதியின் மகன் அப்பாபிள்ளைக்கு அடிமையானான். ஆதி தன் மகனை மீட்க வேண்டுமானால் கடன் வாங்கிய பணத்தையும் பலிசைப் பாக்கியையும் முழுவதும் கொடுக்க வேண்டும். அது முடியாததால் ஆதியின் மகன் அப்பாபிள்ளைக்கு நிரந்தர அடிமையாகிவிட்டான்.

இப்படியாக ஒற்றியாகப் பெற்ற அடிமையை இன்னொருவருக்கும் ஒற்றி வைக்கலாம். அப்போது இரண்டாவது முறை ஒற்றி வாங்கியவருக்கு அந்த அடிமை உரிமையாவான். இப்படியாக அடிமையின் முதலாளி அவனை வேறு ஒருவருக்கு விற்கும்போது அடிமைக்குப் புதிய முதலாளி வருவார்; அடிமையின் சூழலும் மாறும். இப்படி ஒரு செய்தியை 1605ஆம் ஆண்டு ஆவணம் கூறுகிறது.

நாஞ்சில்நாட்டு தோவாளை வட்டம் வீரவநல்லூர் கிராமத்தில் இருக்கும் பிள்ளையார் மடத்தில் உள்ள ஒரு கல்வெட்டு திக்கெலாம் புகழும் பெருமாள் என்னும் பராக்கிரமப் பெருமாள் கொடுத்த நிபந்தம் பற்றிக் கூறுகிறது. இவர் இந்த மடத்துக்கு நிலத்தை நிபந்தமாகக் கொடுத்தபோது சைவ மடத்தின் உள்வேலைக்கு (வெள்ளாட்டி) ஆண்டாள் என்பவளையும் விவசாய வேலைகளுக்கு சாத்தி, முலை உண்ணி, அணைஞ்சி ஆகியோரையும் வேறொருவரிடமிருந்து விலைக்கு வாங்கிக் கொடுக்கிறார். *(T.A.S. Vol VII Part I P 44)*

இதனால் விவசாய நிலத்தை ஸ்ரீதனமாகவோ நிபந்தமாகவோ கொடுக்கும்போது அடிமைகளையும் கொடுக்க வேண்டும் என்ற வழக்கம் இருந்தது தெரிகிறது. இந்த அடிமைகள் சந்தையில் விலைக்கு வாங்கப்பட்டவர்கள். இவர்கள் ஏற்கெனவே அடிமையாக இருந்திருக்கலாம்; இல்லாமலும் இருக்கலாம்.

அடிமையாக விற்கப்பட்டவர் வாங்கியவருக்கு நிரந்தரமாய் அடிமையாகிவிடுவார். அவர் யாருக்காவது விற்கப்பட்டால் அப்போதும் அடிமையாக இருப்பார். இவரைப் போன்ற அடிமைகளுக்கு விடுதலை மரணம் மூலம்தான் வர முடியும். 1711ஆம் ஆண்டு ஓலை இதைப் பூடகமாகக் கூறுகிறது.

அடிமை தொடர்பான செய்திகள் பறையர்களுக்கு மட்டுமல்ல, வீடு அல்லது மடங்களின் உள்பகுதியில் வேலை செய்ய வாங்கப்படும் வெள்ளாட்டிகளுக்கும் பொருந்தும். வெள்ளாட்டிகளை அடிமையாக வாங்கியவர் தனக்கு அவள் தேவையில்லாதபோது இன்னொருவருக்கு விற்றுவிடுவார்.

உள்நாட்டுக் கலவரத்தில் ஈடுபட்டவர்கள், ராஜதுரோகக் குற்றம் செய்தவர்கள் போன்றோரை ஒடுக்கப்பட்ட சாதியினரிடம் ஏலம் விடுதல் என்ற வழக்கு திருவிதாங்கூரில் இருந்தது. இது ஒருவகையான சாதிப்பிரஷ்டம். இப்படியான குற்றவாளிகள் பெரும்பாலும் உயர்சாதியினராக இருந்தனர். இவர்கள் தங்கள் சாதியடையாளத்தை இழக்கச் செய்வது ஒரு தண்டனை.

திருவிதாங்கூர் ராஜ்யத்தின் நிறுவனரான அனுஷம் திருநாள் மார்த்தாண்டவர்மா (1729– 1758) ஆட்சிக்கு வருவதற்குத் தடையாக இருந்தவர்கள் சிலரை வெட்டிக்கொன்றனர். வேறு சிலரைச் சிறைப்பிடித்து முட்டம் கடற்கரையில் (விளவங்கோடு வட்டம்) ஏலம் போட்டனர்.

இப்படியாக விற்கப்பட்டவர்கள் உயர்சாதியினர் ஏலம் எடுத்தவர் கடற்கரை மீனவர்கள். இதை வரலாற்றாசிரியர்கள் பதிவு செய்யவில்லை. ஆனால் வழக்காறுகளிலும் வாய்மொழிப் பாடல்களிலும் இச் செய்திகள் வருகின்றன.

‘எட்டுக்கூட்டத் தம்புரான் கதை’ என்ற அச்சில் வராத வில்லிசைப் பாடல்,

கச்சைமுறி உடுத்த பெண்டுகளை
கண்ணாடி முண்டுடுத்த பெண்டுகளை
முக்குவர்தன்னே போட்டி போட்டு
ஏலம் எடுத்தார் நூறுநூறு
கொச்சு குஞ்சு குறுமான்களை
ஏலம் எடுத்தார் நூறுநூறு

எனக் கூறும். இப்படியாக ஏலம் எடுக்கப்பட்ட பெண்கள் மீனவர்களிடம் கலந்தனர். ஆண்கள் அடிமைகளாயினர். இச்செயல்பாடுகள் ஒருவகை அடிமைக் குழுவை உருவாக்கின.

கேரளத்தில் தகாத பாலுறவு, வன்புணர்ச்சி, கொலை தொடர்பான நம்பூதிரி ஆண், பெண் குற்றவாளிகளுக்கு நடந்த சோதனையை ஸ்மார்த்த விசாரம், பிரத்யாயம் என்னும் இரண்டு சொற்களால் குறிப்பிடுவர். ஸ்மார்த்த விசாரம் நம்பூதிரிப் பெண்களுக்கு உரியது. அவளது வீட்டில் நடக்கும் விசாரணையில் அவள் குற்றவாளி என நிரூபிக்கப்பட்டால் ஜாதிப்பிரஷ்டம், தேகப்பிரஷ்டம் செய்யப்படுவாள்.

நம்பூதிரி ஆண்களுக்குரிய விஷயங்கள் பிரத்யாயம் எனப்படும். இது கேரளத்தில் செங்கனூர், கார்த்திகைப் பள்ளி போன்ற இடங்களில் இருக்கும் காளி கோவில்களிலும் பழைய தென் திருவிதாங்கூரில் (இன்றைய கன்னியாகுமரி மாவட்டம்) சுசீந்திரம் தாணுமாலயப் பெருமாள் கோவிலிலும் நடந்தது. நம்பூதிரி ஆண்கள் (பெரும்பாலும் இளைஞர்கள்) விசாரணையில் குற்றவாளி என நிரூபிக்கப்பட்டால் ஜாதிப்பிரஷ்டம் செய்யப்படுவர்.

கன்னியாகுமரி மாவட்டம் சுசீந்திரம் கோவிலில் நடந்த பிரத்யாயம் சோதனையில் குற்றம் சாட்டப்பட்ட நம்பூதிரி இளைஞர் சுசீந்திரம் ஊரின் கிழக்குத் தெருவில் உள்ள குலசேகரப் பெருமாள் பிள்ளையார் கோவிலின் முன்னே கொண்டு நிறுத்தப்படுவார். இந்த நிகழ்ச்சி இவர் ஜாதிப்பிரஷ்டம் செய்யப்பட்டதன் அடையாளம்.

இதன்பிறகு அந்த இளைஞன் பிற நம்பூதிரிகளுடன் தொடர்புகொள்ள முடியாது. அதனால் அந்த நம்பூதிரி, நாயர் சாதியின் ஒரு பிரிவான பாதமங்கலத்தாரின் வீட்டிலோ தமிழ்த் தேவதாசிகளின் வீட்டிலோ இருப்பார். பெரும்பாலும் சமையல் வேலை. இப்பிரிவுப் பெண்ணை மணக்கத் தடையும் இல்லை.

எண்பதுகளின் பாதியில் சுசீந்திரத்தில் இருந்த பழம்பெரும் நடிகரான எஸ்.எம். குமரேசனிடம் அகில இந்திய வானொலி நிலையத்திற்காகச் செய்தி சேகரிக்கப் போயிருந்தேன். நான் அவருடன் பேசிக்கொண்டிருந்தபோது வயதானவர்கள் சிலரும் உடன் இருந்தார்கள்.

பேச்சு எப்படியெல்லாமோ போய்ப் பிரத்யாயன சாதிப் பிரஷ்டம் பற்றி வந்தது. ‘‘இங்கே இருந்த நம்பூதிரிகளில் சிலர் தமிழ் அல்லது மலையாள தேவதாசிகளுடன் கலந்துவிட்டனர்; என்றாலும் அவர்களின் உறவு

அடிமை முதலாளி போன்றுதான் இருந்தது'' என்றார்கள்.

## ஆவணத்தன்மை

இந்நூலில் கொடுக்கப்பட்ட அடிமை ஆவணங்களிலும் கல்வெட்டுகளிலும் உள்ள செய்திகளின் அடிப்படையில் அடிமைமுறை வணிகமாய் நடந்தது; இது ஓலையில் எழுதப்பட்டது; பதிவு செய்யப்பட்டது; இந்த ஆவணங்கள் அப்போது நாஞ்சில்நாட்டு நிர்வாகப் பொறுப்பை வகித்திருந்த அழகிய பாண்டியபுரம் முதலியார் வீட்டில் பாதுகாக்கப்பட்டன என்று தெரிகிறது.

திருவிதாங்கூர் தொல்லியல் துறையினர் முதலியார் வீட்டிலிருந்த அறுநூறு ஓலைச்சுவடிகளை இரண்டு காலகட்டங்களாக எடுத்துச் சென்றனர். இவற்றிற்கு விலையும் கொடுத்தனர். கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை இதற்கு உதவியிருக்கிறார். இது 1920– 25இல் நடந்திருக்கலாம். இந்த ஓலைகளின் உள்ள விவரப் பட்டியல் முழுமையாகத் தயாரிக்கப்படவில்லை.

இவற்றில் அடிமை ஆவணங்கள் எழுபதுக்கு மேல் இருந்திருக்கின்றன என்று பி. சிதம்பரம்பிள்ளை கூறியிருக்கிறார். இவர் நூறு முதலியார் ஆவணங்களைத் திருவிதாங்கூர் அரசு உதவியுடன் வெளியிட்டிருக்கிறார்.

திருவிதாங்கூர் ஆவணப் பாதுகாப்பகத்தில் உள்ள முதலியார் ஓலைச்சுவடிகள் முழுதும் படி எடுக்கப்படவில்லை. நான் ஏற்கெனவே தமிழினி பதிப்பகம்வழி வெளியிட்ட (2006) 89 ஆவணங்கள், காலச்சுவடு பதிப்பகம்வழி வெளியிட்ட 67 ஆவணங்கள் ஆக 156 ஆவணங்கள் முகவுரை விளக்கவுரையுடன் உள்ளன.

இவை தவிர அச்சில் வராத ஆவணங்கள் ஏறக்குறைய எழுபது உள்ளன. எல்லாமாக 220 ஆவணங்கள். இவை கி.பி. 13ஆம் நூற்றாண்டிற்கும் 19ஆம் நூற்றாண்டிற்கும் இடைப்பட்ட காலத்தில் எழுதப்பட்டவை. இந்த ஆவணங்கள் எல்லாவற்றிற்கும் ஒரு பொதுத்தன்மை உள்ளது. இதை இன்றைய பத்திர பதிவு முறையிலும் காணமுடியும். அடிமை ஆவணங்களும் இதில் அடங்கும்.

இதுவரை கிடைத்த அடிமை ஆவணங்கள் வழி இவற்றின் பொதுவான சில விஷயங்களைக் கூறமுடியும். கி.பி. 1336இல் உள்ள ஏறுமுறி அடிமை ஆவணம் அபூர்வமான சிலசெய்திகளைக் கூறுகிறது. கிடைத்த அடிமை ஆவணங்களில் இது பழைமையானது. அடிமை ஒருவர் தான் சொன்ன

வாக்கைக் காப்பாற்றவில்லை. வருவேன் என்று கூறிச்சென்ற நாளில் தான் வரவில்லையென்பதை முறையிடுவதாக இந்த ஆவணம் அமைந்துள்ளது.

கி.பி. 1459ஆம் ஆண்டு ஆவணத்தில் அடிமை விலைப் பிரமாணம் என்ற சொல் வருகிறது. அடிமையை வாங்கி விற்ற சொல் வருகிறது; இந்தப் பதிவு ஓலையைக் குறிக்க அடிமை ஓலைப் பிரமாணம் என்று பொதுவாகக் குறிப்பிடப்படுகிறது. பத்தொன்பதாம் நூற்றாண்டுவரை இது தொடருகிறது. இத்தகு ஓலைகளில் அடிமைகள் தங்களை விற்றுக்கொள்வதும் முதலாளிகள் தங்கள் அடிமைகளைச் சந்தையில் விற்பனை செய்வதுமான ஆகிய செய்திகள் பதிவுசெய்யப்பட்டுள்ளன.

அடிமை ஆவணங்களில் மலையாள வருஷமே குறிக்கப்படுகின்றன. ஒன்றோ ரெண்டோ ஆவணங்களில் சகாப்தம் ஆண்டு குறிக்கப்படுகிறது. ஆவணங்களில் மாதம், தேதி, கிழமை, திதி ஆகியவையும் குறிக்கப்பட்டிருக்கும்.

1798ஆம் ஆண்டு ஆவணம் இப்படிக் குறிப்பிடுகிறது: "சகாப்தம் 1720இல் மேல் காலயுக்தி வருஷம் மிதுன சனி மேல் வியாழம் நின்ற கொல்லம் 963ஆம் ஆண்டு சித்திரை மாதம் 14ஆம் திங்களாட்சையும் பூச நட்சத்திரமும் பூர்வபட்சத்து சப்தமியும் சூல நாம யோகமும் கோடிக்கரணமும் பெற்ற இந்நாளால் செய்த பறையடிமை ஓலை கரணமாவது" என ஆரம்பிக்கிறது. *(Kerala Society Papers Series 5 P 284)*

நிலம், காளை போன்றவற்றை ஒற்றி கொடுக்கும்போது எழுதப்படும் வாசகங்களே அடிமை, ஒற்றி ஓலைகளிலும் வருகின்றன. இது ஒற்றி ஆவணம் என்று குறிக்கப்படுகிறது. கி.பி. 1472 ஆவணம் ஒன்று தான் பட்ட கடனுக்காகச் சொந்த மகனை ஒற்றிவைத்தது குறித்துப் பேசுகிறது.

இத்தகைய ஆவணம் ஆள் ஒற்றி ஓலை என்று குறிக்கப்படுகிறது. இந்த ஆவணத்தைப் புதுக்கிராமம் (தோவாளை வட்டம்) அழகியமன்னார் கோவில் திருக்கைக்கோளரில் பிறவிப்பெருமாள் எழுதியிருக்கிறார். இவர் இக்கோவில் சபையின் உறுப்பினர். இதனால் ஓர் அடிமை ஆவணத்தை எழுதுபவர் அரசு சார்பான பதிவு அதிகாரியாகத்தான் இருக்க வேண்டும் என்பது கட்டாயமில்லை என்று தெரிகிறது.

ஒரு முதலாளி தன் அடிமையைக் குத்தகைக்குக் கொடுக்க முடியும். ஒருவர் பணம் நெல் அடிமை மூன்றையும் இன்னொருவரிடம்

குத்தகைக்கு விட்டு அதற்கு வட்டியாகப் பணம் பெறுகிற 1505ஆம் ஆண்டு ஆவணம் உள்ளது. இதுபோல் வேறு ஆவணங்கள் கிடைக்கவில்லை.

கி.பி. 1679ஆம் ஆண்டு குமாரகோவில் (கல்குளம் வட்டம்) கல்வெட்டு கோவிலுக்குக் கொடுத்த நிபந்தத்தைக் கூறுகிறது. இதில் "விளையும் மனைகளும் ஆளடிமையும் விட்டுக் கொடுத்து" என வருகிறது. இங்கு ஆளடிமையைப் பறையர் சாதி அடிமை எனக் கொள்ளலாம் (ஆவணம் எண் 22 ப 157) 1682ஆம் ஆண்டுக் கல்வெட்டும் இதுபோன்ற செய்தியைக் கூறுகிறது. *(T.A.S. Vol VII Part I P 44)*

பதிவு எண்ணுடன் (எண் 11335) கூடிய ஒரு உகந்துடைமை – பத்திரம் கிடைத்துள்ளது. இது அச்சில் வரவில்லை. நாஞ்சில் நாட்டு மருமக்கள் வழியினரான வேளாளத் தந்தை ஒருவர் தன் மகனின் ஜீவனத்துக்கு நிலத்தை முழு விருப்பத்துடன் கொடுக்கிறார்.

இந்த நிலத்துடன் ஓர் அடிமையையும் கொடுக்கிறார். இது 1861ஆம் ஆண்டு ஆவணம். அடிமை ஒழிப்புச் சட்டம் வந்த பின்பு ஆறு ஆண்டுகள் கழித்து இந்த ஆவணம் எழுதப்பட்டிருக்கிறது; பதிவும் செய்யப்பட்டிருக்கிறது.

அச்சில் வராத கவிமணியின் கையெழுத்துப் பிரதியில் ஆண்டு குறிக்கப்படாத ஓர் ஆவணம் உள்ளது. இது ராஜாக்கமங்கலம் (அகஸ்தீஸ்வரம் வட்டம்) ஊர் பறையர் ஒருவர் அடிமையானதைக் குறிப்பிடுகிறது.

வெள்ளாட்டியை அடிமையாக விற்கும் ஆவணம் வெள்ளாட்டி விலைக்கரண ஆவணம் என்றே குறிப்பிடப்படுகிறது. பறையடிமை ஆவணத்தைப் போன்றே எல்லா வாசகங்களும் இதில் உள்ளன.

பறையடிமை ஆவணத்தில் தீண்டாதாரில், கிடக்கும் என்னும் அடைமொழி வருவதுபோல் இந்த ஆவணத்தில் வருவதில்லை. அந்த ஒன்றுதான் வெள்ளாட்டி அடிமை ஆவணத்திற்கும் பறையடிமை ஆவணத்திற்கும் உள்ள வேறுபாடு.

சீதன ஆவணத்தில் உள்ள சீதனப் பொருட்களின் பட்டியலில் நிலத்தில் வேலைசெய்யும் அடிமைகளான பறையர்கள் தனியே குறிக்கப்படுகின்றனர். வீட்டுவேலைகளுக்காக வெள்ளாட்டியைச் சீதன அடிமையாகக் கொடுக்கும்போது அடைமொழி இல்லை.

கி.பி. 1430ஆம் ஆண்டின் ஒரு சீதன ஆவணம் வீட்டு வேலைகளுக்காக வெள்ளான் பிள்ளைகளில் எனச் சாதியைக் குறிப்பிடுகிறது. *(Kerala Society Papers Series 5 P 284-85)*

## அடிமைகளை நடத்திய முறை:

முதலாளிகள் அடிமைகளை எப்படி நடத்தினர், எப்படி அழைத்தனர், வீட்டில் வேலை செய்த வெள்ளாட்டி அடிமைகள் உடைமையாளர்களை எப்படி அழைத்தனர், பொதுவாக இவர்களைச் சமூகத்தினர் எப்படி நடத்தினர் என்பவற்றிற்கு அடிமை ஆவணங்களில் விரிவான சான்றுகள் இல்லை. ஆனால் வழக்காறுகளிலும் கதைப்பாடல்களிலும் பத்தொன்பதாம் நூற்றாண்டில் எழுதப்பட்ட மிஷனரிகளின் குறிப்புகளிலும் ஓரளவுத் தகவல்கள் கிடைக்கின்றன.

ஜாய் ஞானதாசன், ஒரு மறக்கப்பட்ட வரலாறு என்ற தன் நூலில் (மதுரை 1998 ப. 62) மிஷனரிகள் கூறியதான ஒரு நிகழ்ச்சியைக் கூறுகிறார். "தாழக்குடி நிலச்சுவான்தார் மாடத்தி என்ற தன் அடிமையை ஏரில் பூட்ட வைத்து உழச்செய்தாராம்; கர்ப்பிணியான அவள் வயலிலேயே மரித்துவிட்டாள்" என்கிறது அச்செய்தி.

கன்னியாகுமரி மாவட்டத்தில் 'ஒடப்பிலபோடு, ஒடப்பில போட்டு மண்ணைத்தள்ளு' என்ற வழக்காறு உண்டு. இதற்கு பெரிய கட்டடங்கள் கட்டும்போது அடிமைப் பெண்ணை அல்லது ஆணை அஸ்திவாரக் குழியில் போட்டு மூடுவது என்று விளக்கம் கொடுக்கின்றனர்.

இந்த மாவட்டத்தின் பெரிய அணைக்கட்டு பேச்சிப்பாறையில் உள்ளது. இதை வடிவமைத்துக் கட்டியவர் மிஞ்சின் துரை. இந்த அணை கட்டப்பட்டபோது, துரைக்குத் தெரியாமலே குலசேகரபுரம் என்ற கிராமத்தில் (தோவாளை வட்டம்) இருந்த பெண் அடிமையை நடு இரவில் பலிகொடுத்தார்கள் என்ற கதை எண்பதுகளில் கூட வழங்கியது.

பேச்சிப்பாறை அணையில் நீர்வரத்துக் குறையும்போது மழை வேண்டி பேச்சிக்குப் படையல் போடும் வழக்கம் இப்போதும் உண்டு. எண்பதுகளில் ஒரு படையல் நிகழ்வில் நான் கலந்துகொண்டபோது நூறு வயதான பார்வதி என்ற மூதாட்டியைச் சந்தித்தேன். அவர், அந்த அணை வேலை நடந்தபோது தன் கணவனுடன் அங்கே வந்திருக்கிறார். அவர் சொன்ன கதைகளில் அடிமைப் பலியும் ஒன்று.

முதலாளியின் அனுமதியுடன்தான் அடிமைகள் வெளியூர் போக

முடியும்; உறவினர்களைச் சந்திக்கக்கூட குறிப்பிட்ட நாளில் வருவதாகச் சொல்லிவிட்டுத்தான் போக முடியும். கி.பி. 1386ஆம் ஆவணத்தில் இது குறித்தத் தகவல் உண்டு.

தாழக்குடி மிராசுதார் ஒருவரின் வீட்டுப் பறையர் சாதி அடிமை தன் வீட்டிற்குச் செல்ல அனுமதி கேட்டிருக்கிறார். ஒரு ஞாயிற்றுக்கிழமையில் அவர் அனுமதிக்கப்பட்டார். அவர் சொன்ன நாளில் வரவில்லை. அவரது மருமகள் அடிமையின் உரிமையாளரைக் கண்டு தன் மாமா திங்கள்கிழமை வருவார் என்றாள். அன்றும் வரவில்லை. அதனால் முதலாளி இந்தச் செய்தியை நாஞ்சில்நாட்டு நிர்வாகியாக இருந்த முதலியாருக்குப் புகாராகக் கொடுத்திருக்கிறார்.

ஒரு பெண் தன்மகனை அடிமையாக ஒருவரிடம் கொண்டு விடும்போது "இவன் கன்று காலிகளை மேய்ப்பான்; இதற்குக் கூலியாகக் கணக்கிடலாம்; ஒருவேளை என் மகன் நோயால் அவதிப்பட்டாலோ வேலை செய்ய முடியாமல் போனாலோ அவனது வேலையை நான் செய்வேன்; அப்படியும் நான் செய்யவில்லையென்றால் என் வளர்ப்புப் பிராணியையும் பசுமாடுகளையும் எடுத்துக்கொள்ளலாம்" என ஒப்புதல் கொடுக்கிறார். இது 1472ஆம் ஆண்டு ஆவணம் கூறும் செய்தி.

ஒருவர் இன்னொருவருக்குப் பணம், நெல் ஆகியவற்றையும் ஒற்றிவைக்கிறார். இந்த அடிமையை உயிரில்லாத பொருளாகக் கருதி எழுதப்பட்டிருப்பதைக் காணலாம். தொல்காப்பியரும் நன்னூலாரும் கூறும் இலக்கணம் இந்த ஆவண வாசகத்தில் செல்லுபடியாகவில்லை. இது 1505ஆம் ஆண்டு ஆவணம்.

மடம், கோவில் இரண்டிற்கும் நிபந்தம் கொடுப்பவர்களும் மகளுக்குச் சீதனமாய் நிலம் கொடுப்பவர்களும் அடிமையையும் வெள்ளாட்டியையும் கொடுத்திருக்கிறார்கள்.

அடிமையை விலைக்குக் கொடுப்பவர்கள் "குருபரம்பரையுடையோமாக ஆண்டு அனுபவித்து வரும் அடிமை" என்று குறிப்பிடுவதை எல்லா ஆவணங்களிலும் காணலாம். ஒரு சொத்தை, மாட்டை, அணிகலன்களைப் பரம்பரையாக அனுபவித்துவருவதுபோல இந்த வாசகம் அமைக்கப்பட்டுள்ளது. இதற்கு இந்த அடிமைகளை வேளாண்தொழில் அறிந்தவர்களாகக் கருதலாம்.

பறையர் அடிமை ஆவணங்களில் மட்டுமல்ல, வெள்ளாட்டி விலையோலைகளிலும் இதே வாசகம் உள்ளது. இதனால் வீட்டு வேலை

செய்யும் அடிமைகளை நம்பத்தகுந்தவர்கள் என்று மறைமுகமாகக் கூறுவதாகக் கருதலாம்.

## அடிமைச் சொற்கள்

பறையர் அடிமைகளைக் குறிப்பதற்காகச் சில சொற்கள் ஆவணங்களில் குறிக்கப்படுகின்றன.

1. புறஞ்சேரியில் கிடக்கும் (1459)

2. பறையரில் மறுசாதியினர் (1459)

3. பறைச்சேரியில் கிடக்கும் பறையரில் பறைச்சி (1472)

4. தோட்டிகோட்டில் ஓரம்சேரி கிடக்கும் பறையர் (1505)

5. ஆள் அடிமை; விளைநிலம் கவனிப்பார் (கல்வெட்டு 1679)

6. மடத்து வேலைக்கு விட்டுக்கொடுத்த மிடி மகள் (கல்வெட்டு 1682)

7. தாழக்குடி புறஞ்சேரியில் தீண்டாதார் (1711)

8. ஆளூர் புறஞ்சேரியில் கிடக்கும் பறையர் அடிமை உரு இரண்டும் (1798)

9. ஆரைவாய்மொழி புறஞ்சேரியில் தீண்டாதார் (1822)

10. தாழக்குடி பெரும் புறஞ்சேரியில் தீண்டாதாரில் (1832)

'பறையர் சாதி மக்கள் வாழும்' என்பதைக் குறிக்க 'கிடக்கும்' என்றும் இவர்களின் எண்ணிக்கையைக் குறிக்க 'உரு' என்றும் பொதுவாக மறுசாதியர் அல்லது தீண்டாதார் வாழும் இடத்தைப் புறஞ்சேரி, ஓரஞ்சேரி என்றும் ஆவணங்களில் குறிப்பிடப்படுவதைச் சாதாரணமாகக் காணலாம். இவர்கள் விவசாய அடிமைகள் என ஒரு கல்வெட்டு (1682) கூறுகிறது.

பறையர் அல்லாத சாதியினருடன் தொடர்புடைய வெள்ளாட்டி அடிமை ஆவணங்களில் எந்த அடைமொழியும் இல்லை (கி.பி. 1455, 1500, 1711). ஒரு சீதன ஓலை, வீட்டு வேலைக்கு உரிய அடிமையான வெள்ளாட்டியைத் தனியாகவும் விவசாய வேலைக்குரிய பறையர் அடிமையைத் தனியாகவும் பிரித்துக் காட்டிக் குறிப்பிடுகின்றது.

## அடிமைகளின் பெயர்கள்

ஆவணங்களில் அடிமைகளின் பெயர்களும் ஊர்களும் குறிப்பிடப்படுகின்றன. இந்தப் பெயர்களில் மிகப் பெரும்பாலானவை நிறுவன சமயம் சார்ந்தவை அல்ல, நாட்டார் தெய்வங்களின் பெயர்கள் உண்டு. அவையத்தி, அனுயத்தி, அவையன் என்னும் பெயர்கள் பொதுவாக வருகின்றன.

பெயருக்கு முன்னே சாதி அடைமொழி இடுவது பெரும்பாலும் ஒடுக்கப்பட்டவர்களுக்கு மட்டுமே இருந்திருக்கிறது. ஒருவரின் பெயர் சொல்லி அவரது மகள்/மகன்/மருமகள் எனக் குறிப்பிடும் வழக்கம் சாதாரணமாக இருந்தது. ஆவணங்களிலும் கல்வெட்டுகளிலும் வரும் சில பெயர்கள் வருமாறு:

1. முள்ளிநாட்டு சேரவன்மாதேவி . . . பறையர் அவையன், சோழ கேரளச் சாம்பான் மகன் அவையன், மருமகன் தடியன், தங்கை நல்லி (கி.பி. 1459).

2. நாச்சியார் மகள் பிறவி, இவள் தங்கை பெருமி, ஆயி மகள் நல்லி தேவி மகள் கற்பகம் (சீதன ஓலை 1430)

3. தென்னவன் குறுநாட்டு ஆளூர் . . . பறைச்சி அனுயத்தி மகன் ஆதி, இவளது மகள் முதலி (1472)

4. தென்னாட்டு குறுநாட்டு மருமத்தூர் பறையரில் அவையத்தான் (1505)

5. பறச்சி உலகுடாச்சி மகள் சாத்தி, முலை உண்ணி, பெரிய மாதி மகள் அணைஞ்சி, முலை உண்ணி கலி கொனன். (கல்வெட்டு 1682)

6. தாழக்குடி புரசு, (1711)

7. ஆளூர் பறச்சி கருத்தி மகள் சிவனி அவளது கணவன் புரசு, திருமாடன் (1792)

8. ஆரல்வாய்மொழி பறை இசக்கி, புரசு மாடத்தி, முலை உண்ணி, பறை மாராச்சி, புரசு காளி, புரசு சின்னகாளி (1827)

9. தாழக்குடி பறையர் புரசு அவனுக்கு இளையவன் (1832)

10. வைகுந்த வளநாட்டு இராஜாக்கமங்கலமான உலகுடையார் சதுர்வேதி மங்கலம் ஆனா மகன் மனாவன் (ஆ. இல்லை)

11. பறையர் பரமன், பறைச்சி அய்யப்பி (சீதன ஓலை ஆ. இ)

12. வெள்ளாட்டி காந்திமதி (1750)

13. வெள்ளாட்டி உமையாண்டி, இவளது மகள் பிச்சி (1458)

14. வெள்ளான் பிள்ளை வளர்த்தி மகள் அளவாச்சி, நல்லி மகள் இளக்கி, நாச்சியார் மகள் நாதன் (1430)

இந்தப் பெயர்களில் வீட்டுவேலைகளைச் செய்த வெள்ளாட்டி அடிமைகளின் பெயர்கள் காந்திமதி, பிச்சி, நாச்சியார் என இருப்பதும் கவனிக்கத்தக்கது.

## வாங்கியவரும் விற்றவரும்

அடிமைகளை வாங்கியவர்களும் விற்றவர்களும் நிலச்சுவான்தார்களே. சாதாரண/நடுத்தர மக்கள் அடிமைகளை வைத்துக்கொள்ளவில்லை. தென்திருவிதாங்கூர் ஆவணங்களில் அடிமைகள் வேளாண் தொழிலுக்காகவே வாங்கப்பட்டார்கள்; வெள்ளாட்டிகள் வீட்டு வேலைகளுக்கு; வேளாண் பிள்ளைகள் மடம், கோவில் வேலைகளுக்கு என்னும் செய்திகள் வருகின்றன.

முதலியார், வேளாளர், செட்டியார், தெலுங்குச் செட்டி ஆகிய சாதியினரே பறையர் அடிமைகளை விற்கவும் வாங்கவும் செய்திருக்கின்றனர்.

## வெள்ளாட்டி அடிமைகளை வாங்கியவர்

விற்றவர், சீதன அடிமைகளைக் கொடுத்தவர், கோவில் நிபந்த அடிமைகளைக் கொடுத்தவர் என எல்லாருமே முன் குறித்த சாதியினரே.

ஆவணங்களில் அடிமைகளின் உடைமையாளர்களின் பெயர்கள் வருமாறு; ஆண்டுவாரியாக வருவன.

1. கி.பி. 1459 அடிமைகள் தங்களைத் தாங்களே விற்றுக் கொண்டனர். வாங்கியவர் மலைமண்டிலம் இரவி நல்லூர் கற்பள்ளி ராமன் அய்யப்பன் நயினார்.

2. கி.பி. 1472 ஆளூர் பறைச்சி அனுயத்தி தன் மகனைப் புதுக்கிராமம் (தோவாளை வட்டம்) இருக்கிண்டிபிள்ளை அப்பா பிள்ளை என்பவரிடம் ஒற்றி வைக்கிறார்.

3. கி.பி. 1505 மருதத்தூர் தோட்டியோடு (கல்குளம் வட்டம்) ஊரைச்

சார்ந்தவர் தன் அடிமையை ஆளூர் நகரம் (கல்குளம்) தானை வென்றான் ஆண்டு கொண்ட முதலியாரிடம் ஒற்றி வைக்கிறான்.

4. கி.பி. **1679** வீரவநல்லூர் (தோவாளை வட்டம்) ஊர்க் கோவிலுக்கு நிபந்தம் கொடுத்தவர் திக்கெலாம் புகழும் பெருமாள். இவர் நிலத்தில் வேலைசெய்ய அடிமையும் கொடுக்கிறார். இவர் குமாரகோவில் (கல்குளம் வட்டம்) முருகன் கோவிலுக்கு நிபந்தத்துடன் அடிமையைக் கொடுப்பதாக இக்கோவிலில் உள்ள கல்வெட்டு (**1682**) கூறும்.

5. **1711** நாஞ்சில்நாட்டு தாழக்குடி (தோவாளை வட்டம்) கணக்கு தம்பிரான் தோழன் பள்ளி உணர்ந்த அணஞ்ச பெருமாள் என்பவருக்கு மேற்படி நாட்டு மேற்படி ஊரில் வாழும் கணக்கு தாணுமாலயப் பெருமாள் ஆதிச்சன் முதலியோர் கொடுத்த பறையடிமை ஓலை.

6. **1798** இன்றைய திருநெல்வேலி மாவட்டம் பழவூர் சித்திர புத்திரர் ஆளூர் (கன்னியாகுமரி மாவட்டம்) தாணுமாலயப் பெருமாளுக்கு ஓர் அடிமையை விலைக்குக் கொடுத்திருக்கிறார்.

7. கி.பி. **1822** தாமரைகுளம் (அகஸ்தீஸ்வரம் வட்டம்) கணக்கு பூதலிங்கம் ஆரல்வாய்மொழி (தோவாளை வட்டம்) ஆறுமுகப்பெருமாள் நந்தீஸ்வரர் என்பவருக்கு ஓர் அடிமையை விற்றிருக்கிறார்.

8. **1832** தாழக்குடி (தோவாளை வட்டம்) கணக்கு தம்புரான் பள்ளி உணர்ந்த அணஞ்ச பெருமாள் அதே ஊரின் தாணுமாலயப் பெருமாள் ஆதிச்சனிடமிருந்து அடிமையை வாங்கியிருக்கிறார்.

இந்த ஆவணங்கள் பறையரை விலைக்கு வாங்கியவர்கள், விற்றவர்களின் பெயர்களைக் கூறுவன. வெள்ளாட்டிகளை அடிமைகளாக வாங்கியவர்களின் பெயர்களும் ஆவணங்களில் உள்ளன. இந்த இடத்தில் வெள்ளாட்டி யார் என்று அறிய வேண்டியிருக்கிறது.

வெள்ளாட்டிக்குப் பொதுவாகப் பணிப்பெண் என்ற பொருளைக் கூறுவது மரபு. திவ்வியப் பிரபந்த உரையில் இதே பொருளில் வருகிறது. 'தமிழ் லெக்சிகன்' *(Vol* **6** ப. *3792)* "சட்டர் வெள்ளாட்டிகளை மடத்தில் வைத்துக்கொள்ளப்பெறார்" என்னும் பார்த்திபசேகரபுரம் செப்பேட்டுச் செய்தியை மேற்கோள் காட்டுகிறது. இந்தச் செப்பேடு கன்னியாகுமரி மாவட்டத்தில் கிடைத்தது.

வெள்ளாட்டிக்கு வைப்பாட்டி என்ற பொருளும் உண்டு. இது இடத்துக்கு

இடம் மாறுபடுகிறது. பொதுவாக செல்வாக்குள்ள சாதியினர் தங்களின் வீட்டில் வேலைசெய்ய தம் சாதிப் பெண்களையே வைப்பர். அவ்வாறு வைக்கப்படுபவர்கள் அதே சாதியில் ஒதுக்கப்பட்டவர்களாக இருப்பதும் உண்டு.

இத்தகைய வெள்ளாட்டி ஆவணங்களில் வாங்கியவர் விற்றவர் பெயர்கள் வருகின்றன. அவை:

1. **1500** திருக்குறுங்குடி தெலுங்குச் செட்டி அக்கண்ணன் மகன் அக்கண்ணன் செட்டி வெள்ளாட்டி அடிமையை வாங்கினார். விற்றவர் அன்னநல்லூர் வாழ்வித்த நம்பி வடிவழகிய நம்பி. ஆனால் இந்த அடிமை ஓலை வேணாட்டில் பதிவுசெய்யப்பட்டது. இக்காலத்தில் வேணாட்டின் கீழ் இப்பகுதி இருந்தது.
2. கி.பி. **1711** ஆரல்வாய்மொழி பொய்க்கலை மகள் ஆண்டிச்சி, புதுக்கிராமம் சொல் விளங்கும் பெருமாள் மகள் அய்யனடியாள் என்பவளிடமிருந்து ஒரு வெள்ளாட்டியை வாங்கியிருக்கிறாள். இந்த ஆவணத்தின் படி வெள்ளாட்டியை வாங்கியவரும் விற்றவரும் பழைய தென் திருவிதாங்கூர் கிராமத்தினர். இருவரும் பெண்கள்; இவர்களில் ஒருவர் தந்தையின் பெயரால் குறிக்கப்படுகிறார். இதனால் இவர் சைவ வேளாளர், செட்டியார் போன்ற சாதியினராக இருக்கலாம்.
3. கி.பி. **1730** பணகுடி ஊர் (இன்றைய திருநெல்வேலி மாவட்டம்) உத்தம நாச்சியார் மகன் மயிலேறும் பெருமாள் என்பவரிட மிருந்து அணஞ்ச பிள்ளை (இன்றைய கன்னியாகுமரி மாவட்டம்) ஒரு வெள்ளாட்டியை வாங்கியிருக்கிறார்.
4. கி.பி. **1430** அன்னநல்லூர் கேசவப்பெருமாள் செட்டியார் தன் மகளுக்குக் கொடுத்த சீதனத்தில் ஒரு வெள்ளாட்டி அடிமையைக் கொடுத்திருக்கிறார்.
5. கி.பி. **1438** அன்னநல்லூர் சோமாண்டான் செட்டியார் தன் தங்கையின் திருமணத்தின்போது வெள்ளாட்டி அடிமையைக் கொடுத்தார்.

## அடிமையை விற்கும் முறை

அடிமையை விற்கும்முறை குறித்த செய்திகள் தென் திருவிதாங்கூர் ஆவணங்களில் உள்ளன. கல்வெட்டுகளிலும் நிபந்தச் சீதன ஓலைகளிலும் இது இல்லை. நிபந்தம் கொடுத்தவர்களும் சீதனம் கொடுத்தவர்களும்

ஏற்கெனவே விலைக்கு வாங்கிச் சொந்தமாய் வைத்திருந்த அடிமைகளைக் கொடுத்திருக்கலாம்.

அடிமைகள் தங்களைத் தாங்களே விற்றுக்கொண்டதான ஆவணத்தில் (கி.பி. 1459) அவர்களின் விலையை நடுவர்களே தீர்மானித்ததாகச் செய்தி வருகிறது. எனவே இந்த அடிமைகள் ஒரு சந்தைக்குச் சென்று தங்களை விற்றுக்கொண்டதாகக் கருதலாம்.

சந்தை மன்றின் மேடையில் எல்லாரும் பார்க்கும்படி அடிமையை நிறுத்திவைப்பர். சந்தையின் காவலரோ தொடர்புடையவரோ, "இவர்களைக் கொள்பவர் இருக்கின்றார்களா?" என்று இரண்டு அல்லது மூன்றுமுறை கேட்பார். அப்போது அந்த அடிமையை விலைக்கு வாங்க விரும்புபவர், "நாங்கள் கொள்ளுகிறோம்; கொள்ளுகிறோம்" என இரண்டு அல்லது மூன்றுமுறை சத்தமாகக் கூறுவார்.

இதன் பிறகு வாங்குபவரும் விற்பவரும் பரஸ்பரம் பேசிக் கொள்ளுவர். அந்த அடிமையின் உழைப்பு, உடலுறுதி பற்றி விவாதிப்பர். அடிமையின் விலை நிச்சயிக்கப்பட்ட பின்பு விலைப்பத்திரம் எழுதப்படும். இதில் சாட்சிகளும் ஒப்பமிடுவர். இந்த முறையே பொதுவாக நடைமுறையிலிருந்தது.

கி.பி. 1798ஆம் ஆண்டு ஆவணம் வித்தியாசமான ஒரு செய்தியைக் கூறுகிறது. ஒருவர் தனது தாய்மாமாவிற்குச் சொந்தமான அடிமையை விற்கும்போது, "விலையாக எழுதிக் கொடுத்தது மட்டுமல்லாமல் நீரோடும் வார்த்துக் கொடுத்தேன்" என்று கூறுகிறார். அடிமையைத் தாரை வார்த்தல் என்ற முறை வேறு ஆவணங்களில் இல்லை.

அடிமைச் சந்தைகளில் அடிமைக்கு விலை வைக்க, பரிசோதிக்க ஆட்கள் உண்டு. சிலசமயம் சாட்சிகளும் அடிமைகளின் விலையை நிர்ணயிப்பதுண்டு. எப்படியென்றாலும் அரசு சார்பான நடுவர் முடிவு செய்ய வேண்டும். சாட்சிகள் நடுவர் முன்பு கையெழுத்திட வேண்டும் என்ற முறை இருந்தது.

தனிப்பட்டவர்கள் மட்டுமல்ல அவரின் உறவினர்களோ ஒரு குடும்பமோ இரண்டு குடும்பமோ அடிமைகளை வைத்துக் கொள்ளலாம் (1827, 1837). இப்படியானவர்கள் அடிமையை விற்கும்போது விற்பவரின் பெயருடன் இன்னின்னார் எனக் குறிப்பிடுவதுண்டு. ஒரு குடும்பத்தில் உள்ள மகன், மகள் என மற்றவர்களும் அடிமையிடம் உரிமை கொண்டாடலாம்.

பறையர் சாதி அடிமையை விற்பனை செய்வதற்குரிய எல்லா முறைகளும் வெள்ளாட்டி அடிமைக்கும் பொருந்தும். வெள்ளாட்டியின் விலையையும் நடுவர்களே தீர்மானித்தனர். அடிமைச் சந்தைகளில் ஆண்கள் மட்டுமல்ல பெண்களும் அடிமைகளாக விற்கப்பட்டனர்; வாங்கியவரில் பெண்களும் உண்டு.

## அடிமைச் சந்தைகள்

தென்திருவிதாங்கூரில் இருந்த சந்தைகளில் அடிமை விற்கும் மன்றில் இடங்கள் பற்றிய குறிப்புகள் ஆவணங்களில் வருகின்றன. தாழக்குடி **(1711)**, ஆளூர் **(1798)**, ஆரல்வாய்மொழி **(1827)**, பூதப்பாண்டி **(1730)**, அழகிய பாண்டியபுரம் **(1600)**, ராஜாக்கமங்கலம் **(1711)** ஆகிய ஊர்களில் அடிமையை விற்க மன்றுகளும் சந்தைகளும் இருந்தன. இந்த ஊர்கள் அனைத்தும் இன்றைய கன்னியாகுமரி மாவட்டத்தில் உள்ளவை. இந்தச் சந்தைகளில் தென்பாண்டிப் பகுதிகளில் உள்ள அடிமைகளும் விற்கக் கொண்டுவரப்பட்டனர்.

## அடிமையின் விலை

அடிமை ஆவணங்களில் அடிமைகளின் விலை நிச்சயிக்கப்பட்ட செய்திகள் உள்ளன. திருவிதாங்கூர் அடிமை ஆவணங்களை ஆராய்ந்த கே.கே. குஷ்மன், பொதுவாகப் பறையர் சாதி ஆண் அடிமைக்கு இருபது முதல் அறுபது பணம்வரை விலை இருந்தது. பறையர் சாதிப் பெண் அடிமைக்கு இன்னும் விலை குறைவு. பறையர் பெண்களை ஒப்பிடும்போது வேட்டுவப் பெண்களின் விலை குறைவு என்கிறார் அவர் *(K.K. Kusumam P 42)* .

தென்திருவிதாங்கூர் ஆவணங்களில் அடிமைகளின் விலை சிலகாலங்களில் அதிகமாகவும் சிலகாலங்களில் குறைவாகவும் இருந்தது. இதற்கு அந்த அடிமைகளின் உடல்வாகு, வயது, அன்றைய தானியங்களின் விலை எனப் பல காரணங்களைக் கூறலாம்.

அடிமையை விலைக்கு அல்லாமல் குத்தகை அல்லது ஒற்றியாக வைக்கும்போது அந்த அடிமைக்கு ஒரு விலையை நிச்சயித்து அந்தத் தொகைக்குரிய பலிசை (வட்டி) நிர்ணயிக்கப்பட்ட செய்தியை ஓர் ஆவணம் கூறுகிறது. **(1505)** ஒருவர் தான் பெற்ற அடிமைக்கு பூவழிக்கு இரண்டு விழுக்காடு பலிசை கொடுப்பதாக வாக்களித்திருக்கிறார்.

## ஆவணங்கள் அடிமை விலை

பறையர் அடிமை கலியுகராமன் பணம்

1711 புரசு, அவரது இளவல்கள் 140 பணம்

ஊசிக்கணம் 04 பணம்

1798 இரண்டு அடிமைகள் 40 பணம்

1827 நான்கு அடிமைகள் 150 பணம்

1832 மூன்று அடிமைகள் 140 பணம்

1459 மூன்று அடிமைகள் 70 பணம்

1472 ஓர் அடிமை ஒரு கோட்டை நெல்

1500 வெள்ளாட்டி ஒருத்தி 25 பணம்

1711 வெள்ளாட்டி ஒருத்தி 50 பணம்

1730 வெள்ளாட்டி ஒருத்தி 20 பணம்

## அடிமை விடுதலை

இந்திய சாதி வேற்றுமை, தீண்டாமை போன்றவற்றில் கிழக்கிந்திய கம்பெனி அரசு மவுனமாகக் காலங்கடத்தியது போலவே பிரிட்டீஷ் அரசும் இருந்தது. இவற்றையெல்லாம் தாண்டிச் சில சமூகப்புரட்சிகள் நடக்க தனிப்பட்டவர்கள் காரணமாயிருந்தனர். இவர்களில் மிஷனரிகளின் பங்கும் உண்டு.

இந்தியாவில் அடிமைகளுக்காக முதலில் குரல் கொடுத்தவர் டாக்டர் வில்லியம் கேரி. கி.பி. 1843இல் கிழக்கிந்திய கம்பெனி அரசு அடிமைகளைக் கணக்கெடுத்தது. 1845ஆம் ஆண்டிலிருந்து அடிமைகளின் விடுதலைக்குரல் தீவிரமாக ஒலித்தது.

தென்திருவிதாங்கூரின் அடிமை ஒழிப்பில் மிஷனரிகளுக்குப் பங்குண்டு. இந்த முயற்சி கிறிஸ்தவத்துக்கு ஆள்சேர்க்கும் காரியம் என்ற கருத்தும் உண்டு. தென்கேரளத்தில் இதற்குக் காரணமானவர்களில் மீட், மால்ட் இருவரும் முக்கியமானவர்கள்.

சார்லஸ் மீட் 1818இல் தென்திருவிதாங்கூருக்கு வந்தார். அவரது

முயற்சியில் 1853இல் அடிமை ஒழிப்பு சட்டமானது. அப்போதைய அரசர் உத்திரம் திருநாள் 15– 10– 1855இல் விடுதலை அறிக்கையை வெளியிட்டார். ஜூன் 18ஆம் நாள் 1855இல் இது அமுல்படுத்தப்பட்டது.

இதன்படி அடிமைகள் எல்லாரும் விடுதலை செய்யப்பட்டனர். அடிமை வரி நின்றது; அடிமைகளை வாங்கவோ விற்கவோ கூடாது; அடிமைகள் தொடர்பான எல்லா வழக்குகளும் முடிவுக்கு வந்துவிட்டன; அடிமைகள் மீதான பதிவு தடைசெய்யப்பட்டது. அடிமையின் மேல் கொடிய தாக்குதலும் தண்டனைக்குரியது என்று கூறப்பட்டது.

அடிமைகள் விடுதலை அடைந்ததைக் குறித்து வில்லியம் பிளச்சர் என்ற மிஷனரி (1834– 1892) “அடிமை வேலை ஒழிந்ததே எமதடிமை ஓலை கிழிந்ததே” எனப் பாடினார்.

# பறையடிமை ஏறுமுறி ஆவணம்

## ம.ஆ. 561 வைகாசி 3 கி.பி. 1386

இந்த ஆவணம் அழகியபாண்டியபுரம் முதலியார் ஆவணத் தொகுப்பின் பழைமையான ஓலைகளில் முக்கியமானது. இது முதலியார்களின் மூன்று பிரிவினர்களில் ஒருவரான வயிராவணர்க்கு நாஞ்சில்நாட்டு தாழக்குடி (தோவாளை வட்டம்) ஊரைச் சார்ந்த ஒருவர் எழுதிய ஏறுமுறி ஆவணம்.

தாழக்குடி மிராசுதாரிடம் பறையர் சாதி அடிமை இருந்தார். அந்த அடிமை 29ஆம் தேதி ஞாயிற்றுக்கிழமை அன்று தன் வீட்டிற்குச் செல்ல அனுமதி கேட்டார். மிராசுதார் அனுமதி கொடுத்தார். போனவர் குறித்த நேரத்தில் வரவில்லை; தனது மருமகளிடம் 31ஆம் தேதி வருவதாகச் சொல்லி அனுப்பினார். ஆனால் 31ஆம் தேதியும் வரவில்லை.

இந்த விஷயத்தை வயிராணவர்க்குத் தெரியப்படுத்தியதை இந்த ஆவணம் குறிப்பிடுகிறது.

### ஆவண மூலம்

1. ... 561 ஆண்டு வைகாசி 3ஆம் தேதி திருவட்டாத்து சபையோம் வைராவணர்க்கு
2. ஏறுமுறி குடுத்த பரிசாவது தாழைக்குடியிலிருக்கும் குன்றம்பிக்கொ
3. தங்களில் ஒரு பறையடிமைக் கணக்கு வழி உண்டாய தாழக்குடியில்
4. முன்னாள் இருபத்தொன்பதாந் தியதி நாயருடடைக்கு இங்கே குறிக்க விட்டெதுமே
5. மருமகளைக் கொண்டு குறையறிவிச்சு விடுகையால் அவன் இன்னமொரு திவசம் குறிச்சு
6. மென்று சொல்வதினாலே அடுத்தநாள் முப்பத்தொன்றாந் தியதி செவ்வாய் கிழமை வரும்படு
7. தளவுக்கு இந்த திவசத்திலும் வாராதது கொண்டு வயிராவணர்க்கு ஏறுமுறி கொடுத்தோம்

8. படக்கு சவைக்கமைஞ்து ஏறுமுறி எழுதின

9. ...தது௵தன் எழுத்து.

அ.கா.பெருமாள் – ‘முதலியார் ஆவணங்கள்’ (2006), ப. 69-70.

# பறையடிமை விலைப்பிரமாணம்

## ம.ஆ. 634 புரட்டாசி 14 கி.பி. 1459

இது அடிமை விலைப் பிரமாணம். முள்ளிநாட்டு சேரவன்மாதேவி (திருநெல்வேலி மாவட்டம்) ஊரில் புறஞ்சேரியில் வாழ்ந்த பறையர் சாதியைச் சேர்ந்த அவையன் சோழ கேரளச் சாம்பான் மகன் அவையன் மருமகன் தடியன் இவன் தங்கை நல்லி ஆகியோர்கள் மலைமண்டிலம் இரவிநல்லூர் கற்பள்ளி இராமன் அய்யப்பன் என்பவனிடம் தங்களை அடிமையாக்கிக் கொண்டனர். இப்படி அடிமையாவதற்கு மூவரும் பட்டினி கிடந்து உடம்பு நொந்ததே காரணம் என்ற குறிப்பும் ஆவணத்தில் உள்ளது. மூவருக்கும் நடுவர்கள் நிச்சயித்த விலை கலியுகராமன் பணம் எழுபது ஆகும். இந்தப் பணம் முழுவதும் வாங்கிக்கொண்ட செய்தியும் ஆவணத்தில் உள்ளது.

இந்த ஆவணம் வேணாட்டு அரசனான வீரமார்த்தாண்டன் (1458–1469) காலத்தது. இவனது காலத்துக்கு முன்பே சேரவன்மாதேவி வேணாட்டரசரிடம் இருந்தது. சேர உதய மார்த்தாண்ட வர்மா (1383–1444) என்ற வேணாட்டு அரசன் களக்காட்டில் அரண்மனை கட்டி வாழ்ந்திருக்கிறான். இதுபோன்ற தொடர்புகளால் களக்காடு, சேரமாதேவி பகுதிகளின் பறையர் சாதியினர் நாஞ்சில் நாட்டில் அடிமையாக விற்கப்பட்டனர் என்று தெரிகிறது.

இந்த ஆவணத்தை எழுதியவன் மேற்பார்வை இட்டவன் என எல்லாரும் சேரவன்மாதேவியைச் சேர்ந்த கைக்கோளர் (செங்குந்த முதலியார்) சாதியினர் ஆவர்.

### மூல ஆவணம்

1. கொல்லம் 634ஆண்டு புரட்டாதி மாதம் 14 தேதி பூற்வபட்சத்து பஞ்சமியும் புதன்கிழமையும் பெற்ற அனிஷத்தின் நாள் செய்த அடிமைவிலைப் பிரமாணமாவது மலைமண்டிலத்து இரவிநல்லூர்

2. கற்பள்ளி ராமன் அய்யப்பனான நயினாற்கு முள்ளிநாட்டு சேரவன் மாதேவிப் புறஞ்சேரியில் கிடக்கும் பறையரில் அவையன் சோழகேரளச் சாம்பான் மகன் அவையனும் மருமகன் தடியனும்.

**3.** இவன் தங்கை நல்லியும் ஓம் எங்களா நாங்கேளே அடிமைவிலைப் பிரமாணஞ் செயிது குடுத்த பரிசாவது அவகால பஞ்சமாய்க் காலுங் கெண்டையும் வீங்கிக் கஞ்சிக்கு அலக்கையிலே எங்கள்

**4.** நாயனும் இட்டுலக்கியாதது கொண்டு எங்களை நாங்களே அடிமைவிலைப் பிரமாணம் செய்து குடுத்தோம் அவையத்தானும் இவன் மருமகன் தடியனும் இவன் தங்கை நல்லியும் ஓம் இராமன் அய்யப்பனான நயினாருக்கு

**5.** இம்மருசாதி எழுதிக்குடுத்த எங்களுக்கு இற்றை நாள் (நடுவர்) முன்பதாக விலை நிற்செயித்த அன்றாடு வழங்கும் நென்மேனி கலியுகராமன் பணம் 70 இப்பணம் எழுபதும் விலையாவணக்களத்தே காட்டி எற்றிக்கைச் செலக்கொண்டு விலைக்குற

**6.** விற்றுப் பொருளுறப் பற்றி விற்று விலைப்பிரமாணஞ் செய்து குடுத்தோம் அவையத்தானும் மருமகன் தடியனும் தங்கை நல்லியும் ஓம் ராமன் அய்யப்பனான நயினாற்கு இம்மருசாதி எழுதிக் குடுத்த எங்களுக்கு

**7.** இதுவே விலை ஓலையும் பொருட்செலவு ஓலையும் ஆவதாகவும் இதுவல்லது வேறு விலையாவணச் சவாவணப் பொருள் மாவறுதிப் பொருட் செலவு ஓலை காட்டவும் காணவும் கடவதன்றியே ஒரு காலாவது மிரு காலாவது

**8.** முக்காலாவதும் ஓலைக்குற்றம் எழுத்துக்குற்றம் சொற்குற்றம் பொருட்குற்றம் மற்றும் எக்குற்றமும் குற்றமின்றியே விற்றுவிலை (ப்பிரமாணஞ்செய்து) குடுத்தோம் அவையத்தானும் மருமகன் தடியனும் தங்கை நல்லியும் ஓம்

**9.** ராமன் அய்யப்பனான நயினாற்கு இப்படிக்கு அவையத்தானும் தடியனும் நல்லியும் கைமாட்டாமைக்கு கைமாட்டெறிந்தோம் இவர்கள் சொல்ல இந்த அடிமை விலைப் பிரமாணம் எழுதினேன்.

**10.** சேரன்மாதேவி நயினார் அழகி...ன் கைக்கோளரில் பெருமான் பெருமான் எழுத்து இப்படி அறிவேன் சேரவன்மாதேவி... பெரியதிருவடி நயினார் எழுத்து. இப்படி அறிவேன் குருவாழி ஆழ்வார் எழுத்து.

அ.கா.பெருமாள் – ‘முதலியார் ஆவணங்கள்’ (2006), பக். 73-74.

# பறையடிமை ஒற்றி ஓலை

## ம.ஆ. 647 தை 2 கி.பி. 1472

இது அடிமை ஓலைப்பிரமாணம். நாஞ்சிநாட்டு புதுக்கிராமம் (தோவாளை வட்டம்) என்ற இராஜநாராயணச் சதுர்வேதி மங்கலத்தில் வாழ்ந்த இருங்கிண்டி பிள்ளை அப்பா பிள்ளை என்பவரிடம் தென்னாட்டு குறுநாட்டு ஆளூர் சேரியில் (கல்குளம் வட்டம்) வாழ்ந்த பறையர் சாதியைச் சார்ந்த அணுயத்தி மகள் ஆதி என்பவள் கடன் வாங்கியிருந்தாள்.

அந்தக் கடனுக்குரிய பலிசை 1.25 கோட்டை நெல் பாக்கியிருந்தது. அதனால் ஆதி தன் மகளை அப்பாபிள்ளைக்கு ஒற்றி வைத்தாள்.

இப்படியாக ஒற்றி வைக்கப்பட்டவன் (அடமானமாகக் கொடுக்கப்பட்டவன்) ஒற்றி வாங்கியவரின் அடிமையாவாள்.

இவள், தன்னை அடிமை ஒற்றியாக வாங்கியவனுக்கு எல்லா வேலைகளையும் செய்ய வேண்டும். ஒருவேளை இந்த அடிமைக்கு உடல் நலமில்லாமல் ஆனாலோ இறந்துவிட்டாலோ அடிமையை ஒற்றிவைத்தவர் அந்த அடிமை செய்ய வேண்டிய வேலைகள் எல்லாவற்றையும் செய்ய வேண்டும். அந்த அடிமையின் பொறுப்பு அடிமையை ஒற்றி வைத்தவருக்கு: அப்படி அவர் செய்யவில்லையென்றால் ஒற்றிவைத்தவரின் நடைமாடுகளையும் வேறு பொருட்களையும் எடுத்துக்கொள்ளலாம். அடிமை தொடர்பான சட்டம், நடைமுறையைக் கூறும் முக்கிய ஆவணம் இது.

இந்த ஆவணம் வேணாட்டு அரசர் கோத ஆதித்ய வர்மா (1469–1484) காலத்தது. இவர் காலத்தில் களக்காடு, வேணாட்டு அரசரின் கீழ் இருந்தது.

### மூல ஆவணம்

1. கொல்லம் 647 ஆண்டு தை மாதம் 2 தேதி நாஞ்சினாட்டுப் பிரமதேயம் புதுக்கிராமம் ஆன ராசநாராயணர் சதுர்வேதிமங்கலத்து நயினார் இருங்கிண்டி

**2.** பிள்ளை அப்பாபிள்ளை நயினார்க்கு தென்னாட்டு குறுநாட்டு ஆளூரில் புறஞ்சேரியில் கிடக்கும் பறையரில் பறைச்சி (அனுயத்தி) மகன் ஆதியேன்

**3.** ...குடுத்த பரிசாவது முன்னாள் இன்னாயினாரோடு கடங்கொ... முன்பாக தீற்று குடுக்க கற்பித்த

**4.** அன்றாடு வழங்கும் நென்மேனி பணம் 10ம் ஒக்கும் எண்ணாழிக் காவா விருபது மரக்கால் படி கோட்டை 1.25 ஆக இக்கோட்டை ஒன்றே காலுக்கும் பணம் பத்துக்கும் பெலிசை சாத்தி என் மகன்

**5.** முதலியை நாளது முதல் ஒற்றியாகப் பற்றிக் கையாளுவரகவும் கையாளுமிடத்து கன்னுகாலி மேய்ப்புக்கு நான்... க... க்கு சொத்து நெல்லு இருநாழி ஆகவும் ஏழு நாளைக்கு நாளொன்றுக்கு சொத்துக்கு

**6.** நெல்லு முன்னாழி ஆகவும் அரைப் பேறும் அரைக்கோட்டை செல்லு இவன்... நான் அயல் ஒத்த பூதிலிருந்தியும் தந்து கையாண்டு போது வாரகவும்

**7.** இப்படிக் கையாண்டு நிற்குமிடத்து இவ்வாள் சாதல் கெடுதல் வலியல் பாய்தல் செல்லில் ஆளுக்கு ஆள் இட்டும் வேலைக் குறை தீர்த்துக் குடுப்பேனாகவும் தீர்த்து

**8.** குடாதொழுகில் என் நடை மாடு படுபொருளும் நடையியழியத் தடுத்தும் வளைத்தும்

**9.** கொளப் பெறுவாராகவும் இப்படி... இட்டுக் கொடுத்தேன் பறைச்சி அனுயத்தி மகன் ஆதியேன் நயினார் இருங்கிண்டில் பிள்ளை அப்பா நயினாற்கு

**10.** அனுயத்தி மகன் ஆதி கைமாட்டாமையால் இவர்கள் சொல்ல இந்த ஆள் ஒற்றி ஓலை எழுதினேன் முள்ளிநாட்டு பிரம்மதேயம் கிரி ராசராச

**11.** சதுர்வேதி மங்கலத்து நயினார் (அழகிய) மன்னனார் கோவிலில் திருக்கைக் கோளரில் பெற்ற பெருநாள் பிறவிப் பெருமான் எழுத்து

அ.கா. பெருமாள் – 'முதலியார் ஆவணங்கள்' (2006), ப. 74-75.

# பறையடிமை ஒற்றி ஓலை

## ம.ஆ. 680 பங்குனி 4 கி.பி. 1505

**இந்த ஆவணம் வித்தியாசமானது.** அடிமையைக் குத்தகைக்கு விட்டு வட்டிவாங்கினர் என்பதைத் தெரிவிக்கும் பறையடிமை ஒற்றி ஆவணம்.

மலையாள ஆண்டு **680** பங்குனி மாதம் **4**ஆம் தேதியில் **(கி.பி. 1505)** ஆளூர் நகரத்து தாளை வென்றான் ஆண்டு கொண்ட முதலியார் நயினார்க்கு எழுதிக்கொடுத்த ஓலை.

“மேற்படியாரிடமிருந்து நெல்லும் அன்றாடு வழங்கும் கலியுகராமன் பணமும் கடனாக பெற்றுக்கொண்டேன். மேலும் தென்னாட்டு குறுநாட்டு மருதத்தூர் கீழ்ப்பகுதியில் தொட்டிகோடு என்ற ஊரில் உள்ள பறையர்களில் அவையத்தான் என்பவனையும் கொண்டேன்.

இப்படியாக பணம், நெல், அடிமை ஆகியவற்றிற்கு வட்டி கொடுப்பேன். இவற்றிற்கு பூவழி பத்துக்கு **2** விழுக்காடு பலிசையும் பணம் ஒன்றுக்கு பூவழி பதினாழி பலிசையும்... குடுப்பேன். அப்படிக் கொடுக்கவில்லை என்றால் எனக்குச் சொந்தமான மாடுகளைப் பிடித்துக்கொள்ளலாம். அதோடு என் பொருட்களை எடுக்கும்போது அழிவு அல்லது தடை வந்தால் மேலும் அதற்குத் தண்டமாகப் பொருள் கொடுப்பேன்.

இதைச் சம்மதித்து ஒப்பமிட்டவன் படிக்காதவன் ஆகையால் அவன் சொல்ல வேறு ஒருவன் இதை எழுதினான்.

இந்த ஓலை எழுதப்பட்ட காலத்தில் வேணாட்டை ஆண்டவன் ரவி ரவி வர்மன் **(1484– 1512)** ஆவான்.

### மூல ஆவணம்

**1.** கொல்லம் **608** பங்குனி **14** ஆளூரான நகரத்து தானை வென்றான் ஆண்டு கொண்ட முதலியார் நயினார்

**2.** ருக்கும் பதினாழிக் காலா . . . **15** மரக்கால் படி **3** களமும் அன்றாடு வழங்கும் நென்மேனி கலியுகராமன் பணம் **1**ம்

3. கொண்டேன் தென்னாட்டு குறுநாட்டு மருதத்தூர் கீழ்பால் தோட்டி கோட்டில் ஓரம் சேரி கிடக்கும் பறையரில் அவையத்தான் . . .

4. கொண்டேன் கொண்டு நெல்லு கலத்துக்கு பூவழி பத்துக்கு இரண்டு விழுக்காடு பலிசையும் பணம் ஒன்றுக்கு பூ வழி பதினாழிப் பலிசையும்

5. இதரக் குடுத்து . . . குடுப்பேனாகவும் அன்று குடாதொழிலே என் நடைமாடு செய் கால் அய் வக

6. படு பொருளரும் நடையில் அழியாது எடுத்துக்கொள்ளப் பொதுவராகவும் தடுத்த பொருளுக்கு அழிவு வருவிலே

7. . . . மேலும் பொருள் மேலும் சார்பிதாகவும் இப்படிக்கு . . . இதை முறியிட்டு . . . வென்றான் ஆண்டு கொண்ட

8. முதலியார் நயினார் அவையத்தானான... இப்படிக்கு அவையத்தான் வரதன் கைமாட்டான் . . . மாட்டெ நிந்தைனும் இவர் சொல்ல

9. இந்த முறி எழுதினான் அண்ட கோட்டு கணக்கு எழுத்து

**இந்த ஆவணத்தைக் கவிமணி கேரள சுவடிப் பாதுகாப்பகத்திலிருந்து 1926 அளவில் பிரதிசெய்திருக்கிறார். இதை அ.கா. பெருமாள் 'முதலியார் ஓலைகள்' நூலில் (காலச்சுவடு பதிப்பகம் 2016) பதிப்பித்துள்ளார் பக். 93-94.**

# தர்மப் பிரமாணம் கல்வெட்டு

(அடிமை நிபந்தம்)

## ம.ஆ. 854 தை 26 சகாத்தம் 1600 கி.பி. 1679

**கல்குளம் வட்டம் குமாரகோவில் ஊரில் வே லாயுதப் பெருமாள் கோவிலின் முன் மண்டபம் இடதுபுறம் விநாயகர் கோவிலின் சுவரில் உள்ள கல்வெட்டு, சகாத்தம் 1600; மலையாள ஆண்டு 854 கி.பி. 1679இல் வெட்டப்பட்டது.**

திக்கெலாம் புகழும் பெருமாள் பராக்கிரமப் பாண்டியப் பெருமாள் அளித்த கொடை; இவர் வீரகேரள நல்லூர் (தோவாளை வட்டம்) ஊரினர். இவர் இக்கோவிலுக்கு மகேஸ்வர பூசை, சிவபாண்டி ஆண்டார் பூசைக்கும் நிலம் நிபந்தம் கொடுத்திருக்கிறார். இந்த நிலத்தில் வேலை செய்ய ஆள் அடிமையும் கொடுத்திருக்கிறார். தமிழ் மொழியில் அமைந்த இக்கல்வெட்டு முப்பத்து நான்கு வரிகள் கொண்டது. இதில் ஏழாம் வரியில் "854 வருடம் தை மாதம் 26 தேதி சிலவு நடத்தியும் விளையும் மனைகளும் ஆள் அடிமையும் விட்டுக் கொடுத்து . . ." என வருகிறது.

இந்த நிபந்தம் கொடுத்தவர் வீரவநல்லூர் மடத்துக்கு நிலம் கொடுத்துப் பறை அடிமை கொடுத்திருக்கிறார். இக்கல்வெட்டில் நிலம், ஆள் அடிமை என்பதால் இது பறையர் அடிமை எனக் கருதலாம்.

**ஆவணம் எண். 22 ப. 157**

# நில நிபந்தக் கல்வெட்டு

## (அடிமை நிபந்தம்)

## ம.ஆ. 858 வைகாசி மாதம் 19

## சகாத்தம் 1605 கி.பி. 1683

இந்தக் கல்வெட்டு தோவாளை தாலுகாவில் உள்ள வீரவநல்லூர் என்ற சிறு கிராமத்தில் இருக்கும் பிள்ளையார் மடத்தின் வெளிப்புறத்தில் கிழக்குப் பக்கச் சுவரில் அறுபத்தெட்டு வரிகள் கொண்ட நீண்ட கல்வெட்டு உள்ளது. தமிழ்மொழியில் தமிழ் எழுத்தில் அமைந்த இக்கல்வெட்டு 1969இல் பதிவு செய்யப்பட்டது.

நாஞ்சிநாட்டு வீரகேரளநல்லூரில் அமைக்கப்பட்டுள்ள பிள்ளையார் மடத்தில் பிள்ளையார் பூசைக்கும் மகேஸ்வர பூசைக்கும் மற்ற சிறப்புப் பூசைகளுக்குமாக மேற்படி ஊரைச் சேர்ந்த திக்கெலாம் புகழும் பெருமாள் எனப்படும் பராக்கிரமப் பாண்டியப் பெருமாள் என்பவர் நிலம் நிபந்தமாகக் கொடுத்த செய்தி இக்கல்வெட்டில் உள்ளது.

இப்படி நிபந்தம் கொடுக்கும்போது மடத்து வேலைக்கு மிடி மகன் திருச்சிற்றம்பலம் அருவியார் மகள் ஆண்டாள் என்பவரையும் கொடுக்கிறாள். வயல், தோட்டங்களைக் கவனிக்க பறையர் சாதி ஆண், பெண்களையும் கொடுக்கிறார். இந்தப் பகுதி பின் வருமாறு: (கல்வெட்டு மூலவரியின் எண்)

**24** . . . . மேல் கூரையும் மடத்து வேலைக்கு விட்டுக் கொடுத்த மிடி மகள் திருச்சிற்றம்பலம் அருவியார்

**25** மகன் ஆண்டானும் பறையடிமையாவது பறைச்சி உலகுடாச்சி மகள் சாத்தியும் மு

**26** லை உண்ணியும் பெரியமாதி மகள் அணைஞ்சியும் முலை உண்ணியும் மேற்படியார் கவி (கொ)

**27** ளானும் ஆக இந்தப்படி உள்ள நிலமும் கொழுவார மனை

*TAS Vol. VII Part I 1930 p. 44*

# பறையடிமை விலையோலை

## ம.ஆ. 973 சித்திரை 14 கி.பி. 1798

இந்த ஆவணம் மலையாள ஆண்டு **973** சித்திரை **14**ஆம் தேதி **(1798)** எழுதப்பட்டது. அடிமையை விலைக்கு வாங்கியவர் ஆளூரான விக்கிரம சோழ பாண்டியபுரம் நகரத்தில் (கல்குளம் வட்டம்) வாழும் தாணுமாலையப்பெருமாள் முதலியார். இவருக்குப் பரம்பரையாய் ஆண்டு அனுபவித்த அடிமையை விற்றவர் பாண்டிமண்டலம் தேசம் முறத்தாயனாடு பனவூர் (திருநெல்வேலி மாவட்டம்) சித்திரபுத்திரர். இவர் மிராசுதார்; கரையாளர். இவர் விலைக்குக் கொடுத்த அடிமைகள் ஆளூர் (கல்குளம் வட்டம்) புறஞ்சேரியில் வாழ்கின்ற கருத்தி மகள் சிவனி, புரசு திருமாடன் ஆக ரெண்டு பேர். இந்த இரண்டுபேரையும் சந்தையில் கூவி விற்றிருக்கிறார். இச்சந்தை ஆளூரில் இருந்திருக்கலாம். இருவரின் விலை ரூ **140.**

### மூல ஆவணம்

சகாப்தம் **1720**இன் மேல் காலயுக்தி வருஷம் மிதுனசனி மேடவியாழம் நின்ற கொல்லம் **973**ஆம் ஆண்டு சித்திரை மாதம் **14**ஆம் தேதி திங்களாட்சையும் பூசநட்சத்திரமும் பூர்வ பட்சத்து சப்தமியும் சூலநாமயோகமும் கோபுக்கரணமும் பெற்ற இந்நாளால் செய்த பறையடிமை விலையோலைக் கரணமாவது.

ஆளூரான விக்கிரமசோழ பாண்டியபுரத்து நகரம் உடைய நயினார் தாணுமாலயப் பெருமாள் முதலியாருக்கு பாண்டிமண்டலம் தேசத்து முறத்தானாடு பனவூரில் இருக்கும் செட்டி அணஞ்ச பெருமாள் கரயாளன் சித்திரபுத்திரனின் பறையடிமை விலையோலை எழுதிக்கொடுத்த பரிசாவது, என் காரணவன் குருபரனுடையோனாக ஆண்டனுபவித்து வருகிற அடிமையாவது ஆளூர் புறஞ்சேரியில் கிடக்கும் பறகுஞ்சிக் கருத்தி மகள் சிவனியும் அவள் புரசு திருமாடனும் ஆக உரு இரண்டும் கொள்வாருளரோ கொள்வாருளரோ என்று யான் முற்கூற கொள்ளுவம் கொள்ளுவம் என்று இவர் பிற்கூறி எம்மில் இசைந்து எதிர்மொழி மொழிந்து மறுமொழி கேட்டு தம்மில் பொருந்தி ஆளூர் மன்றில் ஏற்றி நாலு பேர் நடுவர் முன்பாக விலை நிச்சயிச்ச விலைப்பொருளர்த்தம்

அன்றாடகன் விளங்கும் நெல்மேனி கலியுக ராமன் பணம் **140.** இப்பணம் நூற்றிநால்பதும் விலையாவணக் களத்தே காட்டி ஏற்றி கைச்சிலவற கையில் ஈடேறப் பற்றிக்கொண்டு ஆசந்திர தாரமே சந்ததிப்பிரவேசமே விலையாக எழுதி நீரோடும் வார்த்துக் கொடுத்தேன். அணஞ்ச பெருமாள் கரையாளன் சித்திரபுத்திரனேன் நகரம் உடைய நயினார் தாணுமாலயப் பெருமாள் முதலியார்க்கு இப்பரிசுவிற்ற அடிமைக்கு இதுவே விலையோலையாவதவும் இதுவன்றி வேறொரு கரணம் காணவும் காட்டவும் கடவதன்றியே ஒருக்காலாவது இருக்காலாவது முக்காலாவது ஓலைக்குற்றம் எழுத்துக்குற்றம் எழுத்தாணிக்குற்றம் சொல் குற்றம் பொருள் குற்றம் வெட்டுச்சிருக்கு வரிமாறாட்டம் வாசகப்பிழை வரி நுழைத்தெழுதல் மற்றும் மேல் குற்றவும் குற்றமின்றியே. இதுக்கு அறிவும் சாச்சியும் நகரம் சிதம்பர சுப்பிரமணியன் முதலியோரும் அறியும் கணக்கு பகவதி பல்ப்பனாபனும் அறியும். மாடனடியான் நாராயணனும் அறியும். இவர்கள் நாலுபேரும் அறிய இந்தப் பறயடிமை விலை ஓலை எழுதிக்கொடுத்தேன் அணஞ்சபெருமாள் கரையாளன் சித்திரபுத்திரனென் நகரம் உடைய நயினான் தாணுமாலயப் பெருமாள் முதலியாருக்கு இப்படிக்கு அணஞ்சபெருமாள் கரையாளன் சித்திரபுத்திரன் (ஒப்பு) இப்படி இவர்கள் சொல்ல இந்தப் பறயடிமை விலையோலை எழுதின ஆளூர் தேசத்து ஊர்க்கணக்கு வேல் முருகன் சிதம்பரம் (ஒப்பு)

*Kerala Society Papers Series* **5 1930இல் உள்ள** *W.S. Hunt* **எழுதிய** *Slavery in Kerala* **என்ற கட்டுரையின் (284-285) பின்னிணைப்பாக உள்ள டி.கே. ஜோசப் கொடுத்த ஆவணம். இதைக் கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை தாழக்குடியிலிருந்து எடுத்து (1926) டி.கே. ஜோசப்பிடம் கொடுத்திருக்கிறார்.**

# பறையடிமை விலையோலை

## ம.ஆ. 973 சித்திரை 14 கி.பி. 1798

இந்த அடிமை ஓலை ஆவணத்தில் இது எழுதப்பட்ட நாள் ஆண்டு விபரம் இல்லை. ஆனால் இந்த ஆவணத்தின் மேல் பகுதியில் இவை விவரமாக குறிக்கப்பட்டிருப்பதாக இந்த ஆவணத்தைப் பிரதி செய்த கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை கூறுகிறார்.

இந்த ஆவணத்தின்படி அடிமையை விலைக்கு வாங்கியவர் ஆளூரான விக்கிரமசோழ பாண்டியபுரம் (கல்குளம் வட்டம்) நகரத்தில் வசிக்கும் நாயனார் தாணுமாலயப் பெருமாள் முதலியார் ஆவார். அடிமையை விலைக்குக் கொடுத்தவர் பாண்டி மண்டலம் முறத்தநாடு பகுதியில் (திருநெல்வேலி மாவட்டம் தெற்கு) உள்ள பன ஊரில் வாழும் செட்டியார் அணஞ்ச பெருமாள் சித்திரபுத்திரர் ஆவார்.

இவர் கொடுத்த அடிமைகள் ஆளூர் புறஞ்சேரியில் உள்ளவர்கள். கருத்தி மகள் சிவனி, புரசு திருமாடன் ஆக இரண்டுபேர்கள். இவர்களின் விலை கலியுகராமன் பணம் 140. இவர்களை ஆளூர் மன்றில் நிறுத்தி விலைக்குக் கொடுத்தனர். சாட்சிகள் பகவதி பத்மநாபன் என நான்குபேர். இந்த ஓலையை எழுதியவர் ஆளூர் தேசம் கணக்கு முருகன் சிதம்பரம்.

இந்த அடிமைகள் ஆளூர் மன்றில் நிறுத்தி முறைப்படிக் கூவி விற்கப்பட்டனர்.

இந்த ஆவணம் திருவிதாங்கூரின் இரண்டாம் அரசனான தர்மராஜா கிழவன்ராஜா என்ற கார்த்திகைத் திருநாள் ராமவர்மா காலத்தின் இறுதியில் எழுதப்பட்டது. இவர் 1758– 1795 வரை ஆட்சிபுரிந்தவர். இவர் காலத்தில் திப்பு சுல்தானும், மாயூப் கானும் திருவிதாங்கூரின் மேல் படை எடுத்தனர். இக்காலத்தில் திருவிதாங்கூர் அரசர், எதிரிகளை எதிர்க்க எல்லா சாதிக்காரர்களையும் ராணுவத்தில் சேர்க்க ஆணையிட்ட செய்தி கதைப்பாடல்களில் உள்ளது. இக்காலங்களில் ராணுவப் பொருட்களைச் சுமந்துசெல்லும் கூலியாட்களாகவும் அடிமைகள் சென்றனர்.

### மூல ஆவணம்

ஆளூரான விக்கிரம சோழ பாண்டியபுரத்து நகரம் உடைய நயினான் தாணுமாலயப் பெருமாள் முதலியாருக்கு பாண்டி மண்டலம் தேசத்து முறத்தனாடு பனவூரில் இருக்கும் செட்டி அணஞ்சபெருமாள் கரையாளன் சித்திரபுத்திரனின் பறையடிமை விலையோலை எழுதிக்குடுத்த பரிசாவது. என் காரணவன் குரு பரமுடையோனாக ஆண்டனுபவித்து வருகிற அடிமையாவது ஆளூர் புறஞ்சேரியில் கிடக்கும் பறச்சி கருத்தி மகள் சிவனியும் அவள் புரசு திருமாடனும் ஆக உரு இரண்டும் கொள்வாருளரோ என்று யான் முற்கூற கொள்ளுவம் கொள்ளுவம் என்று இவர் பிற்கூறி எம்மில் இசைந்து எதிர்மொழி மொழிந்து மறுமொழி கேட்டுத் தம்மில் பொருந்தி ஆளூர் மன்றில் எற்றி நாலுபேர் முன்பாக விலைப் பொருளார்த்தம் அன்றாடங்கள் விளங்கும் நெல்மேனி கலியுகராமன் பணம் 140 இப்பணம் நூற்றிநாற்பதும் விலையாவணக் களத்தே காட்டி ஏற்றி கைச்சிலவளகையில் ஈடேறப் பற்றிக் கொண்டு ஆசந்திரதாரமே சந்திப் பிரவேகமே விரையாக எழுதி நீராடும் வார்த்துக் கொடுத்தேன். அணஞ்சபெருமாள் கரையாளன் சித்திரபுத்திரேன் நகரம் உடைய நயினார் தாணுமாலயப் பெருமாள் முதலியார்க்கு இப்பரிசு விற்ற அடிமைக்கு இதுவே விலையோலையாவதாகவும் இதுவன்றி வேறொரு கரணம் காணவும் காட்டவும் கடவதன்றியே ஒருகாலத்து ஓலைக்குற்றம் எழுத்தாணிக் குற்றம் சொல் குற்றம் பொருள் குற்றம் வெட்டுச் சருக்கு வரிமாறாட்டம் வாசகப் பிழை வரி நுழைந்தெழுதல் மற்றும் மேல் குற்றவும் குற்றமின்றியே இதற்கு அறிவும் சாச்சியும் நகரம் சிதம்பரம் சுப்பிரமனியன் முதலியாரும் அறியும் கணக்கு பகவதி பல்பநாபனும் அறியும் மாடனடியான் நாராயணனுமறியும் இவர்கள் நாலுபேரும் அறிய இந்தப் பறையடிமை விலையோலை எழுதிக் குடுத்தேன் அணஞ்ச பெருமாள் கரையாளன் சித்திரபுத்திரனென். நகரம் உடைய நயினான் தாணுமாலயப் பெருமாள் கரையாளன் சித்திரபுத்திரன் (ஒப்பு) இப்படி இவர்கள் சொல்ல இந்தப் பறையடிமை விலையோலை எழுதின ஆளூர் தேசத்து ஊர் கணக்கு வேலி முருகன் சிதம்பரம் (ஒப்பு).

**இந்த ஆவணம் கவிமணியின் கையெழுத்துப் பிரதியில் உள்ளது. இதை அவர் 1910இல் அழகியபாண்டியபுரம் பெரிய வீட்டு முதலியாரின் வீட்டிலிருந்து பெயர்த்து எழுதியிருக்கிறார்.**

# பறையடிமை விலையோலை

## ம.ஆ. 1002 வியவருஷம் தை

## 2 சாலிவாகன சகாப்தம் 1749 கி.பி. 1827

சாலிவாகன சகாப்தம் **1749,** மலையாள வருஷம் **1002 (1827)** எழுதிய பறை அடிமை விலை ஓலை. அடிமையைப் பணம் கொடுத்து விலையாகப் பெற்றவர்கள் நாஞ்சில்நாட்டு ஆரைவாய்மொழி (தோவாளை வட்டம்) ஆறுமுகப்பெருமாள் நந்தீஸ்வரன் முதலிய சிலர். அடிமையை விற்றவர்கள் நாஞ்சி நாட்டு தாமரைகுளம் (அகஸ்தீஸ்வரம் வட்டம்) கணக்கு பூதலிங்கம் ஆவார். இந்த அடிமையின் ஊர் ஆரைவாய்மொழி ஸ்ரீ பாலபொய்கை புறஞ்சேரி. இவர்களின் பெயர்கள் இசக்கி புரசு மாடத்தி (பெண்), முலை உண்ணி (ஆண்), மாராச்சி புரசு காணி (ஆண்), சின்ன காணி (ஆண்) ஆகியன. தாமரைகுளம் பூதலிங்கம் இந்த நாலு அடிமைகளையும் ஏற்கெனவே விலைக்கு வாங்கி வேலைக்கு அமர்த்தியிருக்கிறார். இவர்களை ஆரைவாய்மொழிச் சந்தையில் நிறுத்தி விலைகேட்டுக் கூவினர். நடுவர்கள் விலையை நிச்சயித்தனர். இவர்கள் நாலுபேருக்கும் விலை **150** கலியுகராமன் பணம். இந்தப் பணத்தைப் பெற்றுக்கொண்டு பிரமாணமும் எழுதினர். இதற்கு சாட்சிகள் இராமலிங்கம் உட்பட மூன்றுபேர் ஒப்பம் இட்டுள்ளனர்.

இந்த ஓலை எழுதப்பட்ட காலத்தில் திருவிதாங்கூரின் அரசியாக கவுரி பார்வதிபாய் இருந்தார். **(1815– 1829)** இக்காலத்தில் நாஞ்சில் நாட்டு நிர்வாகப் பொறுப்பை வகித்துவந்த முதலியார்களின் நாட்டுக்கூட்ட அமைப்பை திவான் உம்மிணித் தம்பி உடைத்தார். இது சமூகச் சமநிலைக்குக் காரணமானது.

### மூல ஆவணம்

சாலிவாகன சகாத்தம் **1749**ன் மேல் செல்லா நின்ற கொல்லம் **1002**ம் ஆண்டு வியவருஷம் தை மாதம் **2**ஆம் தேதி மங்கள வாரமும் அமரபட்சத்து ஏகாதசியும் விருத்திய நாம யோகமும் சிங்கக்கரணமாகப் பெற்றநாள் அனுஷ நட்சத்தரமுமாக நான் செய்த பறையடிமை விலையோலைக் கரணமானது நாஞ்சி நாட்டு ஆரைவாய்மொழியில்

ஆறுமுகப்பெருமாள் நந்தீஸ்வரன் உள்ளிட்டாருக்கு மேற்படி நாட்டுத் தாமரைகுளம் கணக்கு பூதலிங்கம் ஆதிச்சன் உள்ளிட்டார் பறையடிமை விலையோலை எழுதிக்கொடுத்த பரிசாவது நாங்கள் குருபரமுடையோராக ஆண்டு அனுபவித்து வருகிறது ஆரைவாய்மொழி ஸ்ரீ பாலபொய்கை புறஞ்சேரியில் கிடக்கும் தீண்டாதாரில் பறை இசக்கி புரசு மாடத்தியும் மேல்படியாள் முலை உண்ணியும் பறை மாராச்சி புரசு காணியும் அதற்கிளைய ஆண் புருசு சின்ன காணியும் ஆக சனம் நாலும் விலை கொள்வாருளரோ கொள்வாருளரோ என்று நாங்கள் முற்கூற விலைகொள்வோம் கொள்வோம் கொள்வோமென்று இவர் பிற்கூறி எம்மிலிசைந்து எதிர்மொழி மொழிந்து மறுமொழி கேட்டு உறுமொழி பேசி தம்மில் பொருந்தி ஆரைவாய்மொழி மன்றருகில் நிறுத்தி நால்வர்கூடி நடுவர் மூலமாக விலை நிச்சயித்த அன்றாடகம் வழங்கும் நெல்மேனி கலியுகராமன் பணம் நூற்றைம்பது இப்பணம் நூற்றைம்பதுக்கும் விலையாவணக் களத்தைக் காட்டி பெற்று கை செலவாகக் கொண்டு விலையறவிற்று பொருளைப் பற்றி விற்று விலைப் பிரமாணம் செய்து கொடுத்தோம் கணக்கு பூதலிங்கம் ஆதிச்சன் உள்ளிட்டார் ஆறுமுகப் பெருமாள் நந்தீஸ்வரன் உள்ளிட்டாருக்கு இப்பரிசு விற்பறை இசக்கி புலமாடத்தியும் மேல்படி முலை உண்ணியும் மாரச்சி புரசு காணியும் அதற்கிளைய ஆண்புரசும் ஆசனம் நாலுக்கும் இது விலையோலையாவதாகவும் இதுவல்லது வேறு விலையாவண பொருளாவண சிலவாவண பொருள் மாண்டறுதி பொருள் செலவு ஓலைக்கரணமும் காட்டவும் கடவதன்றியென ஒருகாலாவது இருகாலாவது முக்காலாவது ஓலைக்குற்றம் எழுத்துக்குற்றம், சொல்குற்றம் பொருள்குற்றம் வெட்டுச்செருக்கு வரிமாறாட்டம், வரிநுழைத்தெழுதுதல், வாசகப்பிழை, மறுஎக்குற்றமும் குற்றமன்றி வியாபித்து விலைப்பிரமாணம் செய்து கொடுத்தோம். கணக்கு பூதலிங்கம் ஆதிச்சன் உள்ளிட்டார். ஆறுமுகப் பெருமாள் நந்தீஸ்வரன் உள்ளீட்டாருக்கு இப்படிக்கு கணக்கு பூதலிங்கம் ஆதிச்சன் உள்ளிட்டார். இதற்கு சாட்சி இராமலிங்கம், நல்ல சிவன் (ஒப்பு) தாணுவன் பிச்சையாண்டி (ஒப்பு) இப்படி இவர்கள் சொல்ல இந்தப் பறையடிமை ஓலைக்கரணம் நடுவெழுதினது ஆரைவாய்மொழி தேசம் ஊர் கணக்கு வன்னியப் பெருமாள் நந்தீஸ்வரன் (ஒப்பு)

**இந்த மூலப்பிரதி ஆரைவாய்மொழி பிரமுகர் என். அகஸ்தியலிங்கம் பிள்ளையின் வீட்டில் இருந்தது. இவரது உறவினர் என். சிவதாணு பிள்ளையவர்களின் புதல்வர் அரிகரமகாதேவன் பிள்ளை இந்த ஆவணத்தைத் தாமரைகுளம் ஊருக்கு எடுத்துச் சென்றார். இதனுடன் வேறு அடிமை ஆவணங்களும் உள்ளன. இந்த ஆவணத்தை ஆர். பத்மநாபபிள்ளை**

**‘ஆரைவாய்மொழி வரலாறும் மீனாட்சி சுந்தரர் கோயிலும்’ என்ற நூலில் (1943) பதிப்பித்திருக்கிறார் பக். 113-114.**

# பறையடிமை விலை ஓலை

## ம.ஆ. 1007 மார்கழி 22 சனி,

## சகாத்தம் 1753 கி.பி. 1832

இந்த அடிமை ஆவணம் மலையாள ஆண்டு 1007 மார்கழி மாதம் 22ஆம் தேதி சனிக்கிழமை சகாத்தம் 1765இல் (கி.பி. 1832) எழுதப்பட்டது. தோவாளை வட்டம் தாழக்குடியில் வாழும் கணக்கு தம்புரான் பள்ளி உணர்ந்தணஞ்ச பெருமாள் மூன்று அடிமைகளை விலைக்கு வாங்கியிருக்கிறார். விலைக்குக் கொடுத்தவர் இதே ஊர் கணக்கு தாணுமாலயப் பெருமாள், ஆதிச்சன் முதலியோர்.

இவர் இந்த அடிமையை ஏற்கெனவே விலைக்கு வாங்கிப் பரம்பரையாக வேலை வாங்கிக்கொண்டிருப்பவர். இந்த அடிமை தாழக்குடி பறைச்சேரியில் வாழும் புரசு, இவளது தங்கை, இன்னொருவர் (இவரது பெயர் கொடுக்கப்பட வில்லை) ஆகியோராவர்.

இவர்களைத் தாழக்குடி மன்றில் நிறுத்தி, “இந்த அடிமைகளை வாங்குபவர் உண்டோ?” எனக் கூவிக் கேட்டபோது வாங்குகிறேன் என்றனர் சிலர். அன்று இந்த அடிமைகளின் விலை கலியுகராமன் பணம் 140, ஊசிக்கரணம் 4 ஆக 144 பணம். இது மூன்றுபேருக்கும் விலை.

அடிமைகளை விலைக்கு வாங்கியவர் படித்தவர்கள். ஆனாலும் கணக்கு பூதனாதர் தெங்கரை முத்து என்பவரே எழுதுகிறார். இரண்டு சாட்சிகள் உண்டு. எல்லாரின் ஒப்பமும் ஆவணத்தில் உள்ளது.

இந்த ஆவணம் எழுதப்பட்ட காலத்தில் திருவிதாங்கூரின் அரசராக சுவாதித்திருநாள் ராமவர்மா (1829– 1847) இருந்தார். இவர் காலத்தில் விபச்சாரிகளுக்கு மொட்டையடிக்கும் வழக்கம், நம்பூதிரி குற்றவாளிகளுக்குரிய கைமுக்குச் சோதனை ஆகியன நிறுத்தப்பட்டன. கன்னியாகுமரி மாவட்ட சிவில் கிரிமினல் வழக்குகளை விசாரிக்க முன்சீப் கோர்ட் அமைக்கப்பட்டது இக்காலத்தில்தான்.

இப்படியான சமூக விழிப்புணர்வுச் செயல்பாடுகள் நடந்தாலும் அடிமைகளை விற்பதிலும் அதற்கென்று மன்றுகள் இருந்ததும் மறுக்க

முடியாது. திருவிதாங்கூர் வரலாற்றாசிரியர்கள் இதைப் பெரிதாக எழுதவில்லை.

## மூல ஆவணம்

சகாத்தம் **1765**இன் மேல் செல்லா நின்ற கொல்லம் **1007** மார்கழி மாதம் **22**ஆம் தேதி சனிக்கிழமையும் பூர்வபட்சத்து பஞ்சமியும் சதய நட்சத்திரமும் சிங்ககரணத்தில் நான் செய்த பறையடிமை விலை யோலைக்கரணமாவது நாஞ்சிநாட்டு தாழக்குடியில் கணக்கு தம்புரான் தோழன் பள்ளி உணர்த்தணஞ்ச பெருமாளுக்கு மேற்படி நாட்டு மேற்படி ஊரில் கணக்கு தாணுமாலயப் பெருமாள் ஆதிச்சன் உள்ளிட்டார்கள் பறையடிமை விலையோலை எழுதிக்குடுத்த பரிசாவது நாங்கள் குருபரமுடையோருமாக ஆண்டனுபவித்து வருகிற தாழைக்குடி பெரும் புறஞ்சேரியில் கிடக்கும் தீண்டாதாரில் பற... அவன் புரசு அவனுக்கிளைய ஆள் **3**ம் விலை கொள்வாருளரோ கொள்வாருளரோ என்று நாங்கள் முற்கூற கொள்வோம் கொள்வோம் என்று இவர் பிற்கூறி எம்மிலிசைந்து எதிர்மொழி மொழிந்து மறுமொழி கேட்டு உறுமொழி பேசி தம்மில் பொருந்தி தாழைக்குடி மன்றில் நிறுத்தி **4**பேர் கூடி நடுவர் முன்பாக விலை நிச்சயித்த அன்றாடகம் வழங்கும் நெல்மேனி கலியுக ராமன் பணம் **140** ஊசிக்கரணம் பணம் **4**ம் ஆக **144.** இப்பணம் நூற்றி நாற்பத்திநாலுக்கு விலையா வணக்களத்தே காட்டி எத்தகைய சிலவாகக் கொண்டு விலையற விற்று பொருளறப் பற்றி விற்று விலைப்பிரமாணம் செய்து கொடுத்தேன். கணக்கு தாணுமாலயப் பெருமாள் ஆதிச்சன் உள்ளிட்டாரென கணக்கு தம்புரான் தோழன் பள்ளியுணர்ந்தணஞ்ச பெருமாள் இப்பரிசு விற்ற பற... அவள் புரசு அவனுக்கிளையராக இவர்கள் **3** பேர்க்கும் இதுவே விலையோலையாவதாகவும் இதுவல்லது வேறு விலையாவண சிலவாவண பொருளாவண பொருள் மாண்டறதிப்பொருள் சிலயோலை கரணமும் நாட்டவும் கடவதன்றியே ஒரு காலாவது இருகாலாவது முக்காலாவது ஓலைக்குற்றம் எழுத்துக்குற்றம் சொற்குற்றம் பொருள்குற்றம் வெட்டுச் செருக்கு வரிமாறாட்டம் வாசகப் பிழையுமாறு எக்குற்றமும் குற்றமன்றி வியாபித்து விலைப்பிரமாணம் செய்து குடுத்தேன். கணக்கு தாணுமாலயப் பெருமாள் ஆதிச்சன் உள்ளிட்டார் என கணக்கு தம்பிரான் தோழன் பள்ளியுணர்ந்தணஞ்ச பெருமாளும் இப்படிக் கணக்கு தாணுமாலயப் பெருமாள் ஆதிச்சன் உள்ளிட்ட இப்படி இவர்கள் சொல்ல இந்தப் பறையடிமை விலை ஓலை நடுவிலெழுதின மேற்படி தேசம் ஊர்க்

கணக்கு பூதனாதன தெங்கரை முத்து ஒப்பு இதற்கு அறிவு சாட்சி கணக்கு அய்யப்பன் அழகன்பெருமாள் ஒப்பு மேற்படி அய்யப்பன் பல்ப்பனாபன் ஒப்பு. கணக்கு வயிரவன் தாணுமாலயப் பெருமாள் ஒப்பு; பல்பனாபன் சிவதாணு ஒப்பு.

**இந்த ஆவணம் தாழக்குடி முத்தும் பெருமாள் பிள்ளையிடம் இருந்தது. இவர் 40களின் ஆரம்பத்தில் நாகர்கோவிலில் குடியேறியபோது தன் வீட்டிலிருந்த பழைய ஓலைச்சுவடிகள் சிலவற்றை ஆர். பத்மநாப பிள்ளையிடம் கொடுத்திருக்கிறார். அவர் தான் எழுதிய 'தாழைக்குடி சரிதமும் சயந்தீசர் அழகம்மன் கோயிலும்' என்ற நூலில் (1944) குறிப்பிட்டிருக்கிறார் (ப. 134-135).**

# உகந்துடைமைப் பிரமாணம்

(பறை அடிமை கொண்டது)

## ம.ஆ. 1036 கி.பி. 1861

தென்திருவிதாங்கூரில் பள்ளியாசிரியராகவும் இந்துமதப் பிரசங்கியராகவும் இருந்த ஆர். பத்மநாப பிள்ளை 30களிலும் 40களின் ஆரம்பத்திலும் பழைய ஆவணங்களைச் சேகரித்து, தாளில் பெயர்த்தெழுதியிருக்கிறார். இவற்றின் அடிப்படையில் இரண்டு புத்தகங்களை வெளியிட்டு உள்ளார்.

இவர் தொகுத்த ஆவணப் பிரதிகளை, இவரது மருமகன் உ. சித்திரபுத்திர பிள்ளையின் வீட்டில் (குலசேகரபுரம்) 80களின் பாதியில் நான் பார்த்தேன்; சிலவற்றைக் குறிப்பெடுத்தேன். அவர் அதை என்னிடம் தர விரும்பவில்லை. அந்தக் குறிப்புகளில் உகந்துடைமை பிராமணம் பற்றிய செய்தி இருந்தது.

உகந்துடைமை என்பது மருமக்கள் வழி வேளாளர் தொடர்பான சொல். கவிமணி இதற்கு அன்பின்வழி வந்தது எனப் பொருள் கொள்கிறார். தந்தையின் சொத்தில் மகனுக்கு உரிமையில்லை; இது மருமக்கள் வழிமுறை. ஆனால் அவனது ஜீவனத்திற்காகக் கொடுக்கப்படும் நிலம் உகந்துடைமை எனப்பட்டது.

தந்தை உயிருடன் இருக்கும்போதே உகந்துடைமை நிலத்தை மகனுக்குப் பதிவு செய்து எழுதிவைக்கலாம். இவ்வாறு எழுதும்போது நிலம் மட்டுமல்ல, தன்னிடம் அடிமைகளாக இருப்பவரையும் உகந்துடைமை நிலத்துடன் கொடுக்கலாம்.

இப்படியாக உகந்துடைமை நிலம் பதிவுசெய்த குறிப்படங்கிய தாள் பிரதியை உ. சித்திரபிள்ளையிடம் பார்த்தேன். அது மலையாள வருஷம் 1007இல் (கி.பி. 1832) பதிவு எண் 11335இல் பதிவு செய்யப்பட்டது. இந்த உகந்துடைமை பத்திரத்தில் நிலத்துடன் அடிமையாக பறையர் சாதிப் பெண் ஒருத்தியையும் கொடுத்த விபரம் உள்ளது.

தாழக்குடியில் கண்டெடுக்கப்பட்ட ஒரு பிரமாணத்தில்

உகந்துடைமையாகக் கொடுக்கப்பட்ட நிலம், தோட்டம் கிணற்றுடன் அடிமை ஆண் ஒருவரையும் கொடுத்த விவரம் உள்ளது.

இது பற்றிய குறிப்பு ஆர். பத்மநாப பிள்ளையின் கையெழுத்துப் பிரதித் தொகுப்பில் உள்ளது.

# பறையடிமை ஓலை

## ஆண்டு இல்லை

**இந்த ஆவணத்தில் பிற விவரங்கள் இல்லை. இராசாக்கமங்கலம் (அகஸ்தீஸ்வரம் வட்டம்) பறையர் சாதி ஆனா மகன் மனாவன் என்பவன் அடிமையாகக் கொடுக்கப்பட வேண்டும் என்ற செய்தியை இந்த ஆவணம் கூறுகிறது. அடிமையை யார் வாங்கினார் என்ற விவரம் ஆவணத்தில் இல்லை. இதன் சில பகுதிகள் சிதைந்துள்ளன.**

### மூல ஆவணம்

**1.** . . . ஆண்டு தை மாதம் **10**ஆம் தேதி பூர்வ பக்கத்து . . . மியும் சனிக்கிழமையும் பெற்ற நான்

**2.** . . . ட்டாறு பொ வைகுந்தவளநாட்டு இராசாக்க மங்கலமான உலகுடைய சதுர வெதி மங்கலத்து பெரு . . .

**3.** . . . ந்த வளநாட்டு . . . மு . . . வில் கிடக்கும் பறையரில் ஆனா மகன் மனாவன் அடிமை

**4.** செய்து குடுத்த பரிசாவது.

**இந்த ஆவணத்தைக் கவிமணி தாமரைகுளத்திலிருந்து 1920 அளவில் எடுத்திருக்கிறார். இதன் இன்னொரு பிரதியையும் அவர் பிரதி செய்திருக்கிறார் இரண்டில் ஒன்று முழுதும் சிதைந்துள்ளது. அ.கா. பெருமாள் 'முதலியார் ஓலைலகள்' (2016) ப. 135.**

# வெள்ளாட்டி அடிமை ஓலை

## ம.ஆ. 675 வைகாசி 19 வெள்ளிக்கிழமை கி.பி. 1500

இந்த அடிமை ஓலைப் பிரமாணம் மலையாள வருஷம் **675** வைகாசி மாதம் **19**ஆம் தேதி **(**கி.பி. **1500)** அமரபட்சமும் வெள்ளிக்கிழமையும் கூடிய மூல நட்சத்திரத்தில் எழுதப்பட்டது. இந்த ஆவணத்தில் வெள்ளாட்டியே அடிமையாகக் குறிக்கப்படுகிறார்.

புறத்தாய அன்னநல்லூர் வளத்து (திருநெல்வேலி மாவட்டம் தெற்கு பகுதி) வாழும் நம்பி வடிவழகிய நம்பிக்கு நாட்டாற்றுப் போக்கு வைகுந்த வளநாட்டுத் திருக்குறும்குடியில் வாழும் (திருநெல்வேலி மாவட்டம் வள்ளியூர் அருகே உள்ள ஊர்) தெலுங்குச்செட்டி அக்கண்ணன் மகன் அக்கண்ணன் எழுதிக்கொடுத்தது இந்த ஓலை. இந்தச் செட்டி வெள்ளாட்டி அடிமையைக் கொண்டதாகப் பதிவுசெய்துள்ளான்.

நான் வெள்ளாட்டி இளையாள் என்ற இந்த அடிமையை விலைக்கு வாங்கி அனுபவித்து வருகிறேன். நான் இவளை நாஞ்சிநாட்டு அதியனூரான அழகியபாண்டியபுரம் ஊர் மன்றில் நிறுத்தி இந்த வெள்ளாட்டி அடிமையை வாங்குபவர் உளரோ உளரோ என்று கூவிக் கேட்டேன். ஒருவர் நான் இவளை வாங்குகிறேன் எனக் கூறி முன்வந்தார்.

நாங்கள் இருவரும் ஒரு மன்றில் கூடிப் பேசினோம். அடிமையின் விலையை முடிவு செய்தோம். இந்த விலை சமகாலத்தில் வழக்கில் உள்ள கலியுகராமன் பணம் இருபத்தைந்து ஆகும். இந்த அடிமையை வாங்கியவரிடம் முழுப்பணத்தைப் பெற்றுக்கொண்டேன். இதுவே விலையாதாரம் என்று குறிப்பிடுகிறான் இந்த அடிமைப் பிரமாணத்தை எழுதிக்கொடுத்தவன்,

இதை ஒரு காலாவது இரு காலாவது முக்காலாவது ஓலைக்குற்றம் எழுத்துக்குற்றம் சொல்குற்றம் பொருள் குற்றம் மற்றும் எக்குற்றமுமின்றி விலைப்பிரமாணம் கொடுத்துள்ளேன் என்றும் குறிப்பிடுகிறான்.

இந்த ஆவணத்தில் குறிப்பிடப்படும் தெலுங்குச் செட்டி அக்கண்ணன்

படிப்பறிவில்லாதவன். அதனால் பிச்சை என்பவன் இந்த விலை ஓலையை எழுதினான். இதற்குத் திருவனந்தபுரத்துக் கோதை சாட்சிக் கையெழுத்துப் போட்டிருக்கிறார்.

இந்த ஆவணம் எழுதப்பட்ட காலத்தில் ரவிரவிவர்மன் வேணாட்டு அரசனாக இருந்திருக்கிறான். இவன் கோவில் நிர்வாகிகள் கிராம நிர்வாகத்தில் தலையிட்டதைத் தடுத்தவன்.

## மூல ஆவணம்

1. கொல்லம் 675ஆம் ஆண்டு வைகாசி மாதம் 19ஆம் தேதி அமர பசிழமும் வெள்ளியாட்சையும் பெற்ற மூலத்தில் செய்த அடிமைவிலைப் பிரமாணமாவது புறத்தாய நாட்டு அன்ன நல்லூர் வளத்து வாழ்வித்த நம்பி வடிவழகிய நம்பிக்கு

2. நாட்டாற்றுப் போக்கு வைகுந்த வளநாட்டு திருக்குறும் குடியில் இருக்கும் தெலுங்குச் செட்டிகளில் அக்கணன் மகன் அக்கணன் விலைப் பிரமாணம் எழுதிக்குடுத்த பரிசாவது நான் விலைகொண்ட

3. உடையோனாய் ஆண்டு அனுபவித்துப் போதுகிற வெள்ளாட்டி இளையாளைக் கொள்வாருளரோ என்று நான் முற்கூற இவர் பிற்கூறி கொள்வேனென்றாகையால் நாஞ்சிநாட்டு அதிகனூரான அழகிய பாண்டியபுரத்து மன்றி

4. லேற்றி நடுவர் முன்பாக எம்மிலிசைந்து விலை நிற்செயித்த அன்றாடு வழங்கும் நன்மேனி கலியுகராமன் பணம் 23 இப்பணம் இருபத்தஞ்சு விலையாவணகளத்தே காட்டி எத்தகைய சிலவாகக் கொண்டு பொருளைப் பற்றி விக்குற விற்று விலைப் . . .

5. பண்ணிக் குடுத்தேன் அக்கண்ணன் மகன் அக்கண்ணன் வளத்து வாழ்வித்த நம்பி வடிவழகிய நம்பிக்கு இப்பரிசு விற்ற வெள்ளாட்டி இளையாளுக்கு இதுவே விலை ஆவதாகவும் இதுவல்லது வேறு விலையாவணச் செலவாணப் பொருள்.

6. மாண்டறுதி பொருள் செலவோலை காணவும் காட்டவும் கடவதன்றியை ஒருகாலாவது இருகாலாவது முக்காலாவது ஓலைக்குற்றம் எழுத்துக்குற்றம் சொல்குற்றம் பொருள்குற்றம் மற்றும் எக்குற்றமும் குற்றமன்றி விற்றுவிலை

7. ப்பிரமாணம் பண்ணிக் குடுத்தேன் அக்கண்ணன் மகன்

அக்கண்ணனேன் வளர்த்து வாழ்வித்த நம்பி வடிவழகிய நம்பிக்கு இளையானை இப்படிக்கு அக்கண்ணன் மகன் அக்கண்ணன் தற்குறிக்கு தற்குறி மாட்டெறிந்தேனும் இப்படிக்கு

8. விலை எழுதினேன் . . . புரத்து . . . பிச்சை எழுத்து

9. அறிவேன் திருவனந்தபுரத்து . . . கோதை எழுத்து.

கவிமணியின் கையெழுத்துப் பிரதியிலிருந்து பதிப்பித்தவர் அ.கா. பெருமாள். 'முதலியார் ஓலைகள்' (2016) பக். 90-91.

# வெள்ளாட்டி விலையோலைக் கரணம்

## ம.ஆ. 886 ஆனி 30 கி.பி. 1711

மலையாள ஆண்டு **886**இல் **(1711)** எழுதப்பட்ட இந்த ஆவணத்தில் சகாப்தம் குறிப்பிடப்படுகிறது. வீட்டு உள் வேலைக்கு வெள்ளாட்டியை விற்பனை செய்த தகவல் இந்த ஆவணத்தில் உள்ளது. இந்த அடிமையை வாங்கியவர் ஆரல்வாய்மொழி (தோவாளை வட்டம்) பொய்கலை மகன் ஆண்டிச்சி பிள்ளை ஆவார். விற்றவர் புதுக்கிராமம் (தோவாளை வட்டம்) அய்யனடியான் என்பவர்.

இந்த வெள்ளாட்டி நாகர் மகன் நல்லதம்பி ஆவான். அய்யனடியான் இவனைப் பரம்பரையாய் அனுபவித்து வருகிறார். இவனை ஆரல்வாய்மொழிச் சந்தையில் மன்றிலில் நிறுத்தி விற்றிருக்கிறார். இவனது விலை **51** கலியுக ராமன் பணம். ஆவணத்தில் பிற வாசகங்கள் மற்றவற்றைப் போலவே உள்ளன. இதில் ஐந்து பேர் சாட்சி கையெழுத்திட்டுள்ளனர்.

இந்த ஆவணம் எழுதப்பட்ட காலத்தில் ரவிவர்மா அரசராயிருந்தார் **(1684– 1718);** இவர் உமையம்மா ராணியை அடுத்து ஆட்சிக்கு வந்தவர். இவரது காலத்தில் மதுரை ராணி மங்கம்மாளின் படை வந்தது. அதிகாரிகள் மக்களிடம் வரிவாங்க கூலிப்படைகளைப் பயன்படுத்தினர். சட்டம் ஒழுங்கு சீர்குலைந்திருந்தது.

### மூல ஆவணம்

சகாத்தம் **1633**இன் மேல் செல்லாநின்ற கொல்லம் **886** ஆண்டு ஆனி மாதம் **30** தேதி அமரபக்கத்து துவாதேசியும் ஆதித்தவாரமும் எனக்கரணமும் விருத்தி நாமருத்தி யோகமும் உரோகணி நாட்செயித வெள்ளாட்டி விலையோலை கரணமாவிது.

நாஞ்சிநாட்டு ஆரைவாய்மொழியில் பொய்க்கலை மகன் ஆண்டிச்சி பிள்ளைக்கு மேற்படி நாட்டு புதுக்கிராமத்தில் சொல் விளங்கும் பெருமாள் மகன் அய்யனடியானென வெள்ளாட்டி விலை ஓலைக்கரணம் எழுதிக்குடுத்த பரிசாவிது.

நான் குருபரமுடையோனாய் ஆண்டு அனுபவித்து வருகிற நாகர் மகன்

நல்ல தம்பியை கொள்வாருளரோ கொள்வாருளரோ என்று நான் முற்கூற இவர் கொள்வோமென்று பிற்கூறி நம்மிலிசைந்து எதிர்மொழி மொழிந்து மறுமொழி கேட்டு பூதப்பாண்டியில் மன்றினிறுத்தி நால்பெர் கூடி நடுவர் முன்பாக விலை நிற்செயித்து அன்றாடகன் வழங்கும் நென்மேனி கலியுகராமன் பணம் **50**ம் யூசிக்கரணம் பணம் **1**ம் ஆக பணம் **51**ம் இப்பணம் அன்பத்தொன்னும் விலையாவண களத்தே நாட்டியேற்றி கொண்டு விலையறவிற்றுப் பொருளறப் பற்றி விற்று விலைப்பிறமாணஞ் செய்து குடுத்தென் சொல்விளங்கும் பெருமாள் மகன் அய்யனடியான்,

பொற்கலை மகன் ஆண்டிச்சிப் பிள்ளைக்கு இப்பரிசு விற்ற வெள்ளாட்டி நாகர் மகள் நல்லதாய்க்கு இதுவே விலையாயதாகவும் இது வல்லது வேறு விலையாவணச் சிலவாவணப் பொருளாவணப் பொருள் மாலறுதி பொருள் மாவறுதி பொருள் சிலவொலைக் காணவும் காட்டவும் கடவதன்றியே மாவறுதி பொருள் சிலவொலைக் காணவும் காட்டவும் கடவதன்றியே யொருலாவது யிருகாலாவது முக்காலாவது ஓலைக்குற்றம் எழுத்துக் குற்றம் சொற் குற்றம் பொருள் குற்றம் வெட்டுச் செதுக்கு வரிமாறாட்டம் வாசகப் பிழை மற்று மெல் குத்தமும் குத்தமதன்றியே விற்று விலைப்பிரமாணஞ்செய்து குடுத்தேன்.

சொல் விளங்கும் பெருமாள் மகன் அய்யனடியான் பொற்கலை மகன் ஆண்டிச்சி பிள்ளைக்கு இப்படிக்கு சொல்விளங்கும் பெருமாள் மகன் அய்யனடியான் தற்குறிக்கு தற்குறி மாட்டறிந்தேனும் இப்படி இவர்கள் சொல்ல இந்த வெள்ளாட்டி விலை யோலைக்கரணம் நடுவெழுதின நாஞ்சினாட்டி தாழைக்குடியில் பெருமாள் குட்டி பரதெசி அறிவென் உலகுடைய பெருமாள் வேலாயுதப் பெருமாளும் அறியும்.

இப்படி அறிவேன் அணஞ்சபெருமாள் கோணைபிள்ளையும் இப்படி அறிவேன் அறமளத்த நயினான் படக்குட்டியும் அறியும் இப்படி அறிவேன் செந்திப் பெருமாள் உலகுடைய பெருமாளும்.

**இந்த ஆவணம் கவிமணியின் கையெழுத்துப் பிரதியில் உள்ளது. கவிமணி இதை நாஞ்சில் நாட்டுத் தாழக்குடி கிராமத்திலிருந்து வாங்கியிருக்கிறார். இதை அவர் டி.கே. ஜோசப்புக்குக் கொடுத்திருக்கிறார். டி.கே. ஜோசப் இந்த ஆவணத்தின் ஒரு பகுதியை** *Kerala Society Papers Series* **5 1930 இல் உள்ள** *W.S. Hunt* **எழுதிய '***Slavery in Kerala'* **(***page* **284-85) கட்டுரையின் பின்னிணைப்பாகக் கொடுத்திருக்கிறார்.**

# வெள்ளாட்டி விலையோலைக் கரணம்

## ம.ஆ. 905 புரட்டாசி மாதம் கி.பி. 1730

சகாத்தம் **1671**ஆம் ஆண்டு **(**கி.பி. **1730)** எழுதிய வெள்ளாட்டி விலை ஓலைக் கரணம். இந்த வெள்ளாட்டி அடிமையாவாள். பிற அடிமைகளைப் போல சந்தையில் விற்கப்பட்டிருக்கிறாள். இந்த அடிமையைத் தன் வீட்டு வேலைக்கு விலைக்கு வாங்கியவர் நாஞ்சிநாட்டு உதையன் புதூர் **(**தோவாளை வட்டம்**)** அணஞ்ச பிள்ளை ஆவார்.

விலைக்குக் கொடுத்தவர் முறத்தாய நாட்டுப் பணகுடி ஊர் **(**திருநெல்வேலி மாவட்டம்**)** உத்தம நாச்சியார் மகன் மயிலேறும் பெருமாள். இந்தப்பெண் இவருக்கு வேலைக்காரியாக இருந்தவர். இந்த வெள்ளாட்டி அடிமையை மயிலேறும் பெருமாள் சொந்தமாய் விலைக்கு வாங்கி அனுபவித்து வருபவர். ஏற்கெனவே இந்த அடிமை சந்தையில் இவள் விற்கப்பட்டவள்.

காந்திமதி என்ற இந்த அடிமை பூதப்பாண்டிச் சந்தையில் நடுவர் முன்பாக விற்கப்பட்டபோது மயிலேறும் பெருமாள் இருபது கலியுகராமன் பணம் கொடுத்து வாங்கியிருக்கிறார்.

### மூல ஆவணம்

சகாத்தம் **1671**இன் மேல் செல்லாநின்ற கொல்லம் **905** ஆண்டு புரட்டாதி மாதம் புதனாச்சையும் அமரபட்சத்துச் சத்தமியும் சித்தநாம யோகமும் சிங்ககரணமும் பெற்ற ரோகிணி நாட் செய்த வெள்ளாட்டி விலையோலைக் கரணமாவது.

நாஞ்சிநாட்டு உதையன் புதுவூரில் அணஞ்சிப் பிள்ளை மகன் அணஞ்சிப் பிள்ளைக்கு முறத்தா நாட்டுப் பணகுடியில் உத்தம நாச்சியார் மகன் மயிலேறும் பெருமாள் உள்ளிட்டார்.

நான் விலைகொண்டு உடையவனாய் ஆண்டு அனுபவித்து வருகிற வெள்ளாட்டி காந்திமதியை விலை கொள்வாருளரோ கொள்வாருளரோ என்று நான் முற்கூற இவர் கொள்வோங் கொள்வோமென்று பிற்கூறி எம்மிலிசைந்து எதிர்மொழிந்து மறுமொழி கேட்டுத் தம்மில் பொருந்தி

நாஞ்சில்நாட்டு பூதப்பாண்டி மன்றில் நிறுத்தி நால்வர் கூடி நடுவர் முன்பாக விலை நிற்செயித்த அன்றாடகன் வழங்கும் நெல்மேனி கலியுக ராமன் பணம் (இருபது) ஊசிக்கரணம் பணம் ஒன்றும் ஆக பணம் ஊசிக்கரணம் பணம் நீக்கி பணம் 2ம் விலையாவணக் களத்தேக்காட்டி யெற்றிக் கைச்சிலவாகக் கொண்டு விலையற வித்துப் பொருளறப் பற்றி விற்று விலைப்பிரமாணம் செய்து குடுத்தென்

உத்தமநாச்சியார் மகன் மயிலேறும் பெருமாள் உள்ளிட்டார் அணஞ்சிப் பிள்ளை மகன் அணஞ்சி பிள்ளைக்கு நான் விலை கொண்டுடையவனாய் ஆண்டனுபவித்து வருகிற வெள்ளாட்டி காந்திமதிக்கு இதுவே விலை

ஓலையாவணப் பொருளமாவறுதிப் பொருள் சிலவோலைக் காணவுங் காட்டவுங் கடவதன்றியே ஒருகாலாவது இருகாலாவது முக்காலாவது ஓலைக்குற்றம் எழுத்துக்குற்றம் சொற்குற்றம் பொருள்குற்றம் வெட்டுச் செதுக்கு வரிமாறாட்டம் வாசகப்பிளை வரிமறுத்தெழுதல் மற்று எக்குற்றமும் குற்றமன்றியே விற்று விலைப்பிரமாணஞ் செய்து கொடுத்தேன்.

உத்தம நாச்சியார் மகன் மயிலேறும் பெருமாள் உள்ளிட்டார் அணஞ்ச பிள்ளை மகன் அணஞ்ச பிள்ளைக்கு இப்படிக்கு உத்தம நாச்சியார் மகன் மயிலேறும் பெருமாள் உள்ளிட்டார் தற்குறிக்கு தற்குறி மாட்டெறிந்தானும் இப்படி இவர்கள் சொல்ல இந்த வெள்ளாட்டி விலையோலை நடுவெழுதின

நாஞ்சிநாட்டு பூதப்பாண்டியில் அணஞ்சமுத்து பூதலிங்கம் எழுத்து.

இப்படி அறிவேன் முறத்தா நாட்டுப் பணகுடியில் செந்தியப் பெருமாள் குமாருப்பிள்ளை இப்படி அறிவேன்

பூதப்பாண்டியரில் குலசேகரப் பெருமாள் பூதநாதன் இப்படி அறிவேன் கலியுகத்து மெய்யன் சேசக்குட்டி இப்படி அறிவேன் நயினான் குமாரசாமி இப்படி அறிவேன் ஆயிரங்காவுடையான் யான் பூதனாதன்

**இந்த ஓலை ஆவணத்தை ஆரைவாய்மொழி சேந்தநாதன் முதலியார் வீட்டிலிருந்து (1940) பெற்ற ஆர். பத்மநாபபிள்ளை 1943இல் தான் வெளியிட்ட 'ஆரைவாய்மொழி வரலாறும் மீனாட்சி சுந்தேரேஸ்வர் கோவிலும்' என்ற நூலில் கொடுத்திருக்கிறார். (1943) பக். 114-115.**

# சீதன ஆவணம்

## ம.ஆ. 606 வைகாசி [கி.பி. 1431]

இது சீதனப் பிரமாணம். கொல்லம் ஆண்டு **606** வைகாசி முதல் தேதியில் **(கி.பி. 1451)** எழுதப்பட்டது. இங்கு சீதனம் கொடுத்தவர் புறத்தாய நாட்டு அன்னநல்லூர் கேசவப் பெருமாள். இவர் கொடுத்த சீதனங்கள் பின்வருமாறு:

இரண்டு பசுக்கள், அன்னநல்லூர் பெரிய குளம் அருகே உள்ள நிலம், செம்பு பாத்திரங்கள், வெண்கல பாத்திரங்கள் ஆகியவற்றுடன் அடிமைகளும் கொடுத்திருக்கிறார்.

### அடிமைகள் விபரம்

வெள்ளான் பிள்ளை சாதியைச் சார்ந்த வளத்தி மகள் அலைவாச்சி நல்லி மகள் இளக்கி நாச்சி மகன் நாகன் வெள்ளாட்டிகளில் நாச்சி மகன் பிறவி, இவன் தங்கை பெருமி, ஆயிமகள் நல்லி, தேவி மகள் கர்பகம்.

பறைச்சிகளில் நல்லிமகள் பொதுவி, இவள் மகள் நல்லி, பொதுவி மகள் அலச்சி, பொதுவி, அலைச்சி மகள் நல்லி, பிறவி தம்பி காதன், சிறுநாகன், பெற்றான் ஆகியோர்.

இந்த ஆவணம், சீதனமாகப் பலவகை வேலைகள் செய்ய பல்வேறு சாதிகளைச் சேர்ந்த அடிமைகளைக் கொடுத்த அபூர்வமான செய்தியைக் கூறுகின்றது.

### மூல ஆவணம்

கொல்லம் **606**ஆம் ஆண்டு வைகாசி மாதம் அமரபக்கத்து ஏகாதசியும் வெள்ளிக்கிழமையும் பெற்ற உத்திரத்து நாள் எழுதின சீதனப் பிரமாணமானது புறத்தாய நாட்டு அன்னநல்லூர் வளத்து வாழ்வித்தான் கேசவப் பெருமாளான கலிங்கத்தேராயதேன் நாஞ்சிநாட்டு அதியனூரான குலோத்துங்கச் சோழச் செட்டி . . . என்பிதா . . . குடுத்த சீதனமாவது பசு ரெண்டும் அன்னநல்லூர் பெரியகுளத்தில் நடுவில் மடையில் நீர் பாய்ந்து நெல்விளையும் நிலத்தில் ந... காலிருணையும் செம்புதரா வெண்கலம் இரண்டுபடியும். வெள்ளான் பிள்ளைகளில் வளத்தி மகள்

அலை வாச்சியும் . . . நாயினானும் நல்லி மகன். . . மகன் இனக்கியும் நாச்சி மகன் நாகனும், வெள்ளாட்டிகளில் நாச்சி மகள் பிறவியும் இவன் தங்கை பெருமியும் ஆயிமகள் நல்லியும் தேவிமகள் கர்பகமும், பறைச்சிகளில் நல்லிமகள் பொதுவியும் இவள் மகள் நல்லியும் பொதுவி மகள் அலச்சியும் இவள் தங்கை பொதுவியும் அலைச்சி மகள் நல்லியும். பழையரில் பொதுவி மகள் பிறவியும் அவன் தம்பி தாதனும் இவள் தம்பி சிறு நாகனும் நல்லி மகன் பிறவியும் இவன் தம்பி பெற்றானும் இவ்வனைவரையும் சீதனமாக எழுதிக்குடுத்தேன்.

*Kerala Society Papers Series* **5இல் 284-85 உள்ள** *W.S. Hunt* **எழுதிய '***Slavery in Kerala'* **என்ற கட்டுரையின் பின்னிணைப்பாக உள்ள ஆவணம். இதைக் கவிமணி தேசிகவிநாயகம் கண்டெடுத்து டி.கே. ஜோசப்பிடம் கொடுத்திருக்கிறார். இந்த ஆவணத்தை நாஞ்சில்நாட்டுத் தாழக்குடியிலிருந்து கவிமணி பெற்றிருக்கிறார்.**

# சீதன ஓலை

## ம.ஆ. 633 அய்ப்பசி 25 கி.பி. 1457

புறத்தாய நாட்டு (திருநெல்வேலி மாவட்டத்தின் தென்பகுதி) அன்னநல்லூர் சோமாண்டான் தன் தங்கையை நாஞ்சிநாட்டு அழகியபாண்டியபுரம் ஊர் மணவாழப்பிள்ளை (மகிழலங்காரச் செட்டி) க்கு மணமுடித்துக் கொடுத்தான். அப்போது அவளுக்குச் சீதனமாகக் கொடுத்தவற்றைப் பதிவு செய்திருக்கிறான். அவை வருமாறு:

புதுக்குளம் நடுவில் மடையின் அருகே வயல் இருபத்திரண்டு தடி; கன்றுகாலிகள் நான்கு; அழகிய பாண்டியபுரம் தெற்கு தெருவில் ஒரு வீடு; இதில் கோவிந்த காங்கேயர் குடியிருந்தார்.

பறையர் அடிமைகள் இரண்டுபேர். பெயர் மனவி, இவளது மகன் ஒருவன் (இவன் பெயர் குறிப்பிடப்படவில்லை) வெள்ளாட்டிகள் இரண்டு பேர். அவர்கள் உமையாண்டி, இவரது மகள் பிச்சி ஆக நான்கு அடிமைகள்.

இந்த நிலம், வீடு, அடிமைகள் எல்லாவற்றையும் பரம்பரையாக ஆண்டு அனுபவித்ததாக சோமாண்டான் குறிப்பிடுகிறான். இந்த சீதனப் பிரமாணம் எழுதப்பட்ட காலத்தில் (1458) வேணாட்டை ஆண்டவன் வீரராம மார்த்தாண்டவர்மா குலசேகரன். இவன் காலத்தில் வேணாடு களக்காடுவரை பரந்து இருந்தது. அதனால் திருநெல்வேலி மாவட்டம் தென்பகுதியில் உள்ளவர்கள் நாஞ்சில்நாட்டு அடிமைகளை, இங்குள்ள மன்றிலிருந்து (சந்தை) வாங்கிச் சென்றிருக்கிறார்கள் என்று தெரிகிறது.

இந்த ஆவணம் பொடிந்த நிலையில் உள்ளது என்கிறார் இதைப் பிரதி செய்த கவிமணி.

### மூல ஆவணம்

**1.** கொல்லம் **633** அற்பசி **25** பூர்வபட்சத்து திரையுபதி நாள்செய்த ஸ்ரீதனப் பிரமாணமாவது புறத்தானாட்டு அன்னநல்லூர் வளத்து வாழ்வித்த சோமாண்டானேன்.

**2.** என்னுடன் பிறந்த . . . யாண்டாரை விவாகம் செய மணவாளப்

பிள்ளை நாஞ்சிநாட்டு அதியனூரான அழகிய பாண்டிய புரத்து குரு . . . திடத்து கொண்டோன் சீருடையானே

3. மகிழலங்கார . . . என்னம்மை சீதனம்பெற்றுடையோனாய ஆண்டவனுபவித்து வருகிற புதுகுளம் நடுவில் மடையில் தடி 22

4. குறிவிட்டு . . . காலுக்குக்கீழ்

5. நாங்கள் குருபரமுடையோமாய ஆண்டனுவவித்து வருகிற பறைச்சி மனைவி மகன்

6. மனவுறும் . . . வெள்ளாட்டி உமையாண்டி மகள் பிச்சியும் கன்று காலு உரு நாலும் மனையாவது அழகிய பாண்டியபுரத்து நகரத்து தெற்கு தெருவில் கோவிந்த காங்கேயர் குடியிருந்து போந்த

7. மனையில் ஒன்று பாதியில் . . . செட்டியார் ஒன்று பாதி நிலமனை பாதியும் ஆக வகைப்படி உள்ள நிலமும் பறையடிமையும் கன்றுகாளயும் சீதனமாகக் கொடுத்தேன்

8. என்னுடன் பிறந்தாளை விவாகம் செய்த மணவாளப் பிள்ளை மகிழலங்காரச் செட்டியார்க்கு

9. . . . வனத்து வாழ்வித்த நம்பி சோமாண்டான் எழுத்து

**கவிமணியின் கையெழுத்து பிரதியிலிருந்து. அ.கா. பெருமாள் பதிப்பு 'முதலியார் ஓலைகள்' (2016) பக். 71.**

# சீதன ஓலை
## ஆண்டு இல்லை

இந்த ஆவணத்தில் எழுதப்பட்ட ஆண்டு உள்ளிட்ட பிற விவரங்கள் இல்லை. சீதனம் கொடுத்தவரின் சாதியும் குறிப்பிடப்படவில்லை. ஏற்கெனவே சேகரிக்கப்பட்ட முதலியார் ஓலைகளில் உள்ள சீதன ஓலைகளின் மொழி வழக்காறு அடிப்படையில் இந்த ஓலை ஒத்துப்போவதால் இந்த ஓலை கி.பி. 17 அல்லது 18ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்டிருக்கலாம் என்று ஊகிக்க முடிகிறது.

இங்கே கொடுக்கப்பட்டுள்ள சீதன ஓலையை எழுதியவர் ஆளூர் விக்கிரமசோழ பாண்டியபுரம் செல்வன் திருக்குறுங்குடியோன் ஆவான். இவனது மகளின் திருமணத்தின்போது எழுதப்பட்டது இந்தச் சீதன ஓலை.

திருக்குறுங்குடிச் செல்வன் தன் மகள் உடைய நாச்சியாரை நாஞ்சில் நாட்டில் ஒருவனுக்கு மணமுடித்து வைத்தான். அப்போது தங்க ஆபரணங்கள் 30 களஞ்சு (சுமார் 96 கிராம்) வெள்ளி 20 களஞ்சு (64 கிராம்) செம்பு பாத்திரங்கள், வயல் ஒரு இடத்தில் 12 தடி; இன்னொரு இடத்தில் 20 தடி ஆக 32 தடி (உத்தேசமாக 20 ஏக்கர்) ஆகியவற்றையும் பறையர் சாதியைச் சார்ந்த பரமன், பறைச்சி அய்யப்பியையும், அவர்களின் மக்களையும் கொடுத்திருக்கிறான்.

இந்த ஓலை ஆளூர் என்ற விக்கிரசோழ பாண்டியபுரம் நகர சேனாதிபதி கூத்தன் கண்டன் முன்னிலையில் பதிவுசெய்யப்பட்டிருக்கிறது. சாட்சிக் கையெழுத்தை ஆட்கொண்டான் போட்டிருக்கிறான். பத்திரத்தை ஓர் அதிகாரி சொல்லப் பொதுவன் என்பவன் எழுதியிருக்கிறான். இவன் ஊர்க் கணக்கனாக இருக்கலாம்.

### மூல ஆவணம்

1. . . . மாவது ஆளூரான விக்கிரம சோழபாண்டியபுரத்து செல்வன் திருக்குறுங்குடியேன் என் மகள் உடைய நாச்சியாரை நாஞ்சி . . .

2. . . . ன்னியாத் தானமாகக் குடுத்து இவருக்கு சீதனமாகக் கொடுத்த பொன் முப்பதின் கழஞ்சு வெள்ளி இரும்பதின் கழஞ்சு செம்பு

**3.** . . . தடி **10** . . . பா . . . பழாந்தடி **12** நெட்டிறைத்தடி ஆக தடி **32** . . . மாக

**4.** பறையன் பரமனும் பறைச்சி அய்ப்பியும் மக்களும் எகாணையும் வீடு

**5.** . . . தும என் மகள் உடைய நாச்சியார் . . . கு கன்னியாதான மாகக் கொடுத்தேன் செல்வன் திருக்குறுங்குடி

**6.** தானமாகக் கொடுத்தேன் செல்வன் திருக்குறுங்குடியென் இப்படிக்கு இவனைத்

**7.** செல்வன் திருக்குறுங்குடி எழுத்து கூத்தன் கண்டனாகிய நகர சேனாபதிகள் எழுத்து

**8.** . . . ண்டான் சேனாபதி தற்குறிக்கும் இவை ஆழட்க் கொண்டான் நம்பி எழுத்து இப்படி அறிவே

**9.** . . . சொல்ல மேற்படி சீதன . . . வோலை எழுதின மேல்படி நகரத்துப் பொதுவன் செல்வன் எழுத்து.

**அ.கா. பெருமாள், முதலியார் ஓலைகள் (2016) பக். 104-105.**

# சீதன ஓலை

## ம.ஆ. 886 ஆனி 32 கி.பி. 1711

பதினெட்டாம் நூற்றாண்டில் தர்மராஜா என்ற கார்த்திகைத் திருநாள் ராஜா (1758– 1798) என்று அழைக்கப்பட்ட திருவிதாங்கூர் அரசர் ராமேஸ்வரத்திற்குத் தீர்த்தயாத்திரை சென்றிருக்கிறார். அப்போது அவருக்குப் பாதுகாப்பாகச் சென்ற மெய்க்காப்பாளர் வீரர்களுள் வயிரவன் மார்த்தாண்டன் பிள்ளையும் ஒருவர். இவர் நாஞ்சில் நாட்டு தாழக்குடி ஊரின் செல்வந்தர்.

வைரவன் பிள்ளை பாரம்பரியமான குடும்பத்தினர். இவரது கொள்ளுத்தாத்தா நாயக்கர் படைகளை எதிர்த்துப் போரிட்டு முத்தண்ணன் என்றும் தானம் பெற்றவர். வைரவர் பிள்ளையின் சகோதரர் திருமணம் நடந்தபோது எழுதப்பட்ட சீதன ஓலையை, இவரது மரபில் வந்த கடுக்கரை குமாரசாமியிடமிருந்து பத்மநாபபிள்ளை சேகரித்திருக்கிறார். இந்த ஓலையின் குறிப்புகள் அடங்கிய பழைய காகிதப் பொட்டலத்தை, பத்மநாப பிள்ளையின் மருமகன் உ. சித்திரபுத்திர பிள்ளையிடம் பார்த்தேன். இந்தக் குறிப்பில் வைரவன் பிள்ளை வீட்டுச் சீதன ஓலை மலையாள ஆண்டு 886 ஆனி மாதம் 32இல் எழுதியதாக உள்ளது. இந்தச் சீதனப்பட்டியலில் வேலைக்கு வெள்ளாள வெள்ளாட்டி அடிமையாகக் கொடுக்கப்பட்ட செய்தி உள்ளது. இதில் பறையர் அடிமையாகக் கொடுக்கப்பட்ட தகவல் இல்லை. இந்த ஆவணத்தின் படி வெள்ளாட்டி வேலைக்கு (வீட்டு சமையல், போன்ற வேலை) என இருப்பதால் இந்த வெள்ளாட்டி வேளாளச் சாதிப் பெண் எனக் கருதலாம்.

பின்னிணைப்பு எண் 1

# காளை ஒற்றி ஆவணம்

ம.ஆ. 651 பங்குனி [கி.பி. 1476]

**1.** கொல்லம் **652**ம் ஆண்டு பங்குனி மாதம் செய்த படுகல வொற்றி யோலைக்கரணமாவது ஆளூரான விக்கிரம சோழ பாண்டியபுரத்து

**2.** சடையன் திருவேங்கட முடையார்க்கு அதியனூரான அழகிய பாண்டியபுரத்தில் குசத்தியறையில் அய்யப்பன் குருத்தனேன் இற்றைநாள் இவர் பக்கல்

**3.** . . . அன்றாடு வழங்கும் நென்மேனி கலியுகராமன் பணம் **10** ஒக்கும் அழிக்காலால் **21** மரக்கால்

**4.** . . . கோட்டை ஒன்றுக்கும் நான் ஒற்றிவைச்சுக் குடுத்த காளை நான் ஆண்டு அனுபவிச்சு வருகிற காரிக்குல் எருதென்று.

**5.** ஒற்றியாகக் கைய்யாளுவாராகவும் இப்படி கைய்யாளுமிடத்து சாகுதல் கெடுகிதல் வலியப் பாய்தல் செய்கில் உருவுக்குரு விட்டுக் குடுப்பே

**6.** னாகவும் உருவுக்குரு விட்டுக் குடாதொழுகில் என் நடைமாடு செய்கால் அய்வகைப்பட்ட பயன்படு பொருளும் நடையில னியத் தடுத்தும் வளைச்சும்

**7.** ம் உருவுக்குரு விடுவிச்சுக் கொள்ளுவாராகவும் இப்படி சம்மதிச்சு இந்தப் பணம் **10**ம் கோட்டை **1**ம் கொண்டு இந்த காரிக்குல் காளை படுகல்

**8.** ஒற்றியாக எழுதிக் குடுத்தேன் சடையன் திருவேங்கடமுடையா னுக்கு அய்யப்பன் குந்தனேன் இப்படிக்கு

**9.** இவை அய்யப்பன் குருந்தன் தற்குறிக்குத் தற்குறி மாட்டறிந்தேனும் இவர்கள் சொல்ல இந்தப் படுகல ஒற்றி

**10.** யோலை எழுதினேன் மேற்படி யாரின் நயினான் நயினான் எழுத்து

**கவிமணியின் கையெழுத்துப் பிரதியிலிருந்து அ.கா. பெருமாள் ‘முதலியார் ஆவணங்கள்’**

பி இ எண் 2

## சாம்பான் ஒற்றிக்கு நிலம் எடுத்த ஆவணம்

ம.ஆ. 637 அடி 10 [கி.பி 1462]

1. கொல்லம் 637ஆம் ஆண்டு ஆடி மாதம் 10ஆம் தேதி நாஞ்சி நாட்டு அதியனூரான அழகியபாண்டியபுரத்துப் பெருமாள் அண்ணாமலைப் பெருமாளான சுந்தர பாண்டியச் செட்டிக்கு

2. தடுத்தாட்கொண்ட மேற்படி ஆள் தென்னவன் செட்டியாம் கேசவன் சாம்பானுக்கு வழிக்கல முறி எழுதிக் கொடுத்த

3. பரிசாவது இந்த நாள் இவன் பக்கல் வாங்கிய நெல்மேனி கலியுகராமன் 4 இப்பணம் நாலுக்கு இவனுக்கு

4. ஒற்றி உள்ள புதுக்குளம் மேல மட தடி 12 அளவின் படி உள்ள நிலம் முன்னொற்றி மீளும் பொழுது

5. இப்பணம் முன்குடுக்க பின்னொற்றி கொள்ளுவோமாராகவும் மேற்படி சம்மதிச்சி வழிக்கலமுறி எழுதிக் குடுத்தோம்

6. சுந்தரபாண்டியச் செட்டியும் தென்னவன் செட்டியும் கேசவச் சாம்பானுக்கு

7. இப்படிக்கு தென்னவன் செட்டி எழுத்து

**கவிமணியின் கையெழுத்துப் பிரதியிலிருந்து அ.கா. பெருமாள் 'முதலியார் ஓலைகள்' (2016) ப. 74-75.**

பி.இ. எண் 3

# பள்ளர் நிலவுடைமையாளர்

ம.ஆ. 777 ஆவணி 22 [கி.பி. 1601]

**1.** கொல்லம் **777** ஆண்டு ஆவணி **22** நாகிராட்சையும் திருவோணவும் அமரபக்கத்து திரையோதேசியும் பெற்ற இன்னாளால் எழுதின விளைவில் ஓலைக்காரியமாவது தென்னாட்டு குறுநாட்டு

**2.** வீரநாராயண சேரியில் பனைவிளையனாச் சேரியில் இருக்கும் பள்ளரில் ஆண்டி அவையத்தானும் ஆண்டி கோதச்சனும் ஆளூரான சுனைநீர் குறிச்சி தேவனுள்ளதான காங்க யாகுவிலை

**3.** எழுதிக்குடுத்த பரிசாவது நா . . . கொண்டு ஆண்டனுபவித்து வருகிற விளை . . . கொட்டு மணக்கரை கட்டியான்டு

**4.** பற்றில் அக்கரை விலைக்கு பெருநான் கெ . . . கீழ் எல்லை வீர நாராயண சேரி பற்றில் செட்டி கோணத்து . . . முறிக்கு வடக்கு மேலே எல்லை அய்யப்பன் விளைக்கு

**5.** வட வெல்லை பண்டார விளைக்கு தெற்கு நான்கு எல்லை நடுவில் கிடந்த அக்கரை விளையில் எங் . . . ஒன்னும் விலையாகா தலைவர் எண்மர் கூடி வாயில பறைநதி

**6.** சைந்து விலைநீர் செயித்த விலைப்பொருள் சுத்தமெலாம் விலையாவணக் களத்தே காட்டி யொறிகைச் சிலவரக் கொண்டு விலைக்குற விற்று விலைகலஞ் செய்து எழுதி நீரோடும் வாத்து

**7.** குடுத்தோம் ஆண்டி அவையத்தானும் ஆண்டி தோதைச்சனும் தெவன் துள்ளான் காங்கய நயினார்க்கு . . . (ஓலை முடியவில்லை)

**அ.கா. பெருமாள் - ‘முதலியார் ஆவணங்கள்’ (2006) ப. 84-85.**

## பி.இ. எண் 4

# பறையர் நாட்டின் சுமைதாங்கி

தாழைக்குடி, தாழைக்கண்டன் சாத்தன் கோவிலுக்குச் செல்லும் வழியில் ஆற்றுப்படியில் ஒரு கல்வெட்டு சிதைந்துள்ளது. இந்தப் பாதையில் ஒரு சுமைதாங்கி இருந்தது. இதில் உள்ள கல்வெட்டை பத்மநாபபிள்ளை 1930இல் படி எடுத்திருக்கிறார்.

1034 ஆண்டு கார்த்திகை மாதம் 12 மேலப்பறச்சேரி மறத்தி பரசு மறதொடி மாடன் தீற்பிச்சு குடுத்தான்

கி.பி. 1859ஆம் ஆண்டு மேலப்பறைச் சேரியைச் சேர்ந்த மாடன் கட்டிய சுமைதாங்கி

**ஆர். பத்மநாபபிள்ளை, 'தாழைக்குடி சரிதமும், சயந்தீசர் அழகம்மன் கோயிலும்' (1944) ப. 151.**

பி.இ. எண். 5

# ஓண விழா சுமடு எடுத்தல்

ம.ஆ. 808 ஐப்பசி 7 [கி.பி. 1632]

**1.** நாஞ்சிநாட்டில் பெரும் பற்றில் நமக்கு பிறந்த நாட்கும் ஓணத்தினும் பூசெக்கும்

**2.** திருதாரைக்கும் ஆண்டுதோறும் கெட்டி வைக்கின்ற சுமடும் தயிரும் கீழ் மரிசாதி ஒள்ளவண்ணம்.

**3.** அவ்வாறே ஏற்றம் எழுதி உபத்திரவம் செய்யின்றி என்னும் சொல்லி நாட்டார் நம்மோடு தங்க

**4.** டம் பறஞ்ஞாறே பண்டு முன்னாள் குலசேகரப் பெருமாள் அம்மாவன்றே காலத்து சுமடும்

**5.** தயிரும் கெட்டிய வண்ணமே தங்கள் கெட்டி நடக்குமாறும் இவ்வண்ணம் அல்லாதே ஏற்றம்

**6.** கெட்டாண்டாம் என்னும் இவ எண்ணூற்று எட்டாமாண்டு அல்பசி மாதம் ஏழாந் தியதி கல்பித்தமைக்கு

**7.** இச்செய்தி சொல்லி நாஞ்சி நாட்டு வடவகை தென் வீதி நாடமைந்த பேர்க்கு நீட்டு எழுதிவிடு என்று திருவுள்ளமாய நீட்டு.

**அ.கா. பெருமாள் – 'முதலியார் ஆவணங்கள்' (2006) ப. 21**

பி.இ. எண். 6

# நிபந்தம் சுமந்துவர வேண்டும்

ம.ஆ. 901 மாசி 21 (கி.பி. 1726)

**1.** தன் பேரால் அழகியபாண்டிபுரம் உள்ளிட்ட பற்றில் நின்னும் துளாயாயிர்த் தொன்நாமாண்டு மாசி மாதம்

**2.** இருபத்தி இரண்டாம் தியதி சிவன் ராத்திரி நாள் நயினார் திருமலை மகாதேவர்க்கு சிறுதாரை

**3.** ஆடி அருளுகின்ற வகைக்கு சறுவாணி பிராமணர்க்கு வைச்சூட்டு நிறுபலிக்குந்ந வகைக்கும்

**4.** கூட வரவேண்டும் வழுதிலங்காய், பூசனிக்காய் அருவா கோருவை நிலவா உட்பட சிமடு அன்பதும்

**5.** தயிர் கோட்டை ஒன்றும் ஒண்டாக்கி மெய்ப்படி மாதம் பதினாலாம் தேதி

**6.** முஞ்சிறை கொண்டு வந்து காச்சைப் பண்டாரப் பினாயில் கொண்டு வந்து கையாளிக்கு

**7.** மாறும் செய்த இது மெய்ப்படி ஆண்டு மாசிமாதம் பதினாலாம் தேதி கல்பித்தமைக்கு

**8.** பண்டாரம் பணயிறை விக்கிரமன் சங்கரனு நீட்டி எழுதிவிடு எந்நு திருவுள்ள மாயது நீட்டு

**அ.கா. பெருமாள் – 'முதலியார் ஆவணங்கள்' (2006) ப. 113)**

பி.இ. எண். 7

## அரசர் பிறந்த நாளுக்குப் பிராமணர்களுக்குச் சாப்பாடு

ம.ஆ. 902 புரட்டாசி 17 [கி.பி. 1727]

**1.** **902**ம் ஆண்டு புரட்டாசி மாதம் **17**ஆம் தேதி நம்முடே

**2.** ஆட்டப் பிறந்த நாளுக்கு சறுவாணி பிராமணர்க்கு வைச்சூட்டு நிற்பவிக்குக வகைக்கு வாளைக்காய்

**3.** வழுதலைங்காய் தடியங்காய் தயிர் மரவை அரிவாள் கோருவை உள்பட ஒண்டாக்கி

**4.** மேல்படி மாதம் **15**ம் தியதி மணலிக்கரை கோயிக்கல் கொண்டு வந்து

**5.** கையளிக்கு மாறும் செய்க இச்செய்தி அழகியபாண்டியபுரத்து

**6.** ஊராருக்கு நீட்டு எழுதிவிடு எந்நி திருவுள்ளமாய நீட்டு

**அ.கா. பெருமாள் – 'முதலியார் ஆவணங்கள்' (2006) ப. 114.**

பி.இ. எண். 8

# அரசரின் பிறந்த நாளுக்குப் பிராமணர்களுக்குச் சாப்பாடு ஆண்டு இல்லை

**1.** . . . . . .

**2.** . . . . . . அரசருட ஆட்ட நாளுக்கு

**3.** . . . தட்சணை கொடுக்கானும்

**4.** வைச்சூட்டு நிர்வகிக்க வகக்கு

**5.** வழுதலங்கா பூசனிக்கா . . .

**6.** தலச்சுமடா கட்டி எடுப்பான் வேண்டி

**7.** . . . பாண்டிய புரத்து பேர்க்கு நீட்டு

**8.** எழுதிவிடு திருவுள்ளமாய நீட்டு

**கவிமணியின் கையெழுத்துப் பிரதி.**

பி.இ. எண். 9

## ஓணநாளுக்குக் காய்கறிகள் சுமடு எடுத்தல்

ம.ஆ. 808 ஐப்பசி [கி.பி. 1632]

**1.** நம்முட பிறந்தநாள் ஓணத்தினும் பூசக்கும்

**2.** சறுவாணி பிராமணருக்கு வைச்சூட்டுக்கும்

**3.** கீழ்மரிசாதி தொடா வண்ணம் சுமடு எடுத்து

**4.** தயிரும் பாலும் கொண்டு வருக என்று (பூர்த்தியாகாதது)

**கவிமணியின் கையெழுத்துப் பிரதி.**

பி.இ. எ. 10

## ஶ்ரீபலி மண்டபப் பணி அடிமை வேலை

ம.ஆ. 973 ஆனி 8 (கி.பி. 1798)

**1.** இவிடத்தே செயிதியாவது சுசீந்திரம் கோவில் சீவேலி மண்டபம் பணிவகைக்கு பிடாகைக்காரர் செந்நு கல்லு வலிச்சு வரும் போள்

**2.** அழகியபாண்டியபுரம் பிடாகைக்காரர் ஏதானும் பேர் வாராழிக கொண்டு வாராத்த புள்ளிக்காறர்க்கு வரியோலை எழுதித் தரண மெந்நும் வைச்சு

**3.** காரியக்காரரும் கேள்விக்காரரும் அம்பலக்காரரே விரோதிச்சு கல்லுவலிப்பான் போயதில் மூந்நு நாலு அம்பலக்காரரைக் கொண்டு வாராத்த ஆளுகட்கு அம்பல

**4.** காறருக்கு பேர் **1**க்கு பணம் **12** வீதமும் இளந்தாரிகள் பேர் **1**க்கு பணம் **9** வீதவும் வரியோலை எழுதி வாங்ஙிக் கொண்டு உடன் தன்னே சீட்டு எழுதி வலிய சம்ப்றதியில் கொடுத்து

**5.** குஞ்சுகூட்டக்காரர் வந்து அம்பலக்காறரேயும் இளந்தாரிகளையும் அறியிச்சு குனிச்சு நிறுத்தி கல்லுகேத்தி ஏறிய சோத்தியம் செய்யுந்நு எந்நும்

**6.** அழகியபாண்டியபுரம் பிடாகை கேள்வியில் இதன் வண்ணம் உள்ள வேலைக்காரியங்களுக்கு வாராத்த ஆளுகளுக்கு வரியோலை எழுதியால் வரியோலை

**7.** முதலியாரிடே பக்கத்தில் கொடுத்து முதலியார் எழுதிட்டு கேள்விக்காறருடே பற்றில் கொடுத்து பணம் பிரிச்சு வந்நு என்னும் இப்போள் ஏதானும் அம்பலக்காரர்

**8.** கூடி வரியோலை எழுதிக்கொடுத்து அதில் வண்ணம் பிரிக்குந்நது சங்கட மாருந்து வெந்நும் முதலியாரிடே சாதனம் எழுதி வந்திருக்கக்கொண்டு முதலியாரே

**9.** போதிப்பாதே வரியோலை எழுதிக் கொடுத்த அம்பலக்காரரே வருந்தி

எந்நு கொண்டெந்நும் விசாரிச்சு பிழையுள்ள ஆளுகளைக் கொண்டு பிழை செய்விச்சு கொள்ளணம்

**10.** இதின் வண்ணம் உள்ள வேலை காரியத்தினு வாராத்த ஆளுகளுக்கு வரியோலை எழுதி வாங்ஙிச்சால் ரண்டு பணமும் மூந்நு பணவும் வாங்ஙிப்பாறென்னு எந்நும்

**11.** கேள்வி கொண்டு கல்லு வலிப்பான் வாராத்த ஆளுகளுக்கு இளந்தாரிகளுக்கு மூந்நு பணவும் அம்பலக்காரருக்கு நாலு பணமும் வீதமும் முதல் கூட்டிச்சங் கொண்டு சேழம்

**12.** பணம் கணக்கில் குறைவு எழுதிச்ச கொள்ளுகையும் வேணும், இச்செய்தி எல்லாம் பிள்ளைமார் வாயிச்ச தோவாள மண்டபத்து வாதுக்கல் காரியக்காரருக்கு கேள்ப்பிச்சு வைக்கேயும் வேணும்.

**13.** இச்செய்திக்கு சாதனம் எழுதிய திவான்.

கவிமணியின் கையெழுத்துப் பிரதியிலிருந்து அ.கா. பெருமாள் ‘முதலியார் ஆவணங்கள்’ (2006) ப. 139-140.

பி.இ. எண். 11

## விசாரிப்புக்கார அடிமை

ம.ஆ. 973 தை 3 (கி.பி. 1798)

**1.** தாழக்குடி பிடாகக் கேள்வியில் தாழக்குடி அவன்றே மருமகன் மேற்படியாருடே மக்களேயும் நன்மைக்கு இருந்

**2.** தினோ **973** மாண்டு தை மாதம்

**3.** ஆம் தேதி ஆயிரம் பணத்தினோ அடியறைக்கு பருக்கேயிம் எடுப்பிச்சு நன்மக்கு இடுவிச்சி கொடுக்கத்தக்க வண்ணம் சாதனம் கொடுத்து அயச்சாறே சங்கரமூர்த்தி

**4.** முதல் பெயரே அழகியபாண்டியபுரத்து முதலிமார்களுடே வீட்டு வகயென்னும் முதலிமாருடே குடும்பத்தின் நன்மை தின்மைக்குச் சங்கரமூர்த்தி முதல் பேர் கூடி அல்லாதே நடக்க

**5.** இல்லென்னும் முதலிமார் பறைக கொண்டு அவரிடே வீட்டு வகையாயிட்டு உள்ளவரே நன்மைக்கு இடுன்னதினோ அடியறைக்கு பலிக்கயும் எடுப்பிச்சு நன்மை இடுவிச்சு கட்டிலாழிக்

**6.** கொண்டு சங்கரமூர்த்தி மகாராசனெக் கொண்டு அடியறைக்கு எழிப்பிச்சு பணம் உத்திரவாடாயிட்டு கணக்கில் முதல் கூட்டிக் கொண்டும் சங்கரமூர்தி முதல் பேரே

**7.** நன்மைக்கு இருவிக்கையும் அடுத்த முதலிமாருடே குடும்பத்தில் நன்மை தின்மைக்கு கீழில் பதிவின் வண்ணம் நடத்திக்கொள்ள தக்கவண்ணம் முதல் பேரே வருத்தி பறஞ்ஞு நடத்திக் கொடுக்கயும் வேணும் என்னும் இக்காரியம் சொல்லி **973**ஆம் ஆண்டு ஆனி மாதம் **24**ஆம் தேதி நீலகண்டன் மார்த்தாண்டன் நீட்டு

**8.** எழுதிவிடு என்னும் திருவுள்ளமாய நீட்டு

**ஆர். பத்மநாப பிள்ளை 'தாழக்குடி சரிதமும் சயந்தீஸ்வரர் அழகம்மன் கோவிலும்' (1944) பக். 124-125.**

# உதவிய நூற்கள்


இராமச்சந்திரன், கணேசன். அ. 2010, ‘தோள்சீலைக் கலகம், தெரிந்த பொய்கள் தெரியாத உண்மைகள்’.

கிருஷ்ணன் என்.டி. 2002, ‘வடக்கு வீட்டு வம்சாவழி வரலாறு’, ஜெய்கிருஷ்ணா பதிப்பகம், நாகர்கோவில்.

கேசவன் 1912 ‘தர்மராஜாவின் தர்மம்’, ஆசிரியர், கொட்டாரம்.

சதாசிவம் செ., 1949, ‘சேரநாடும் செந்தமிழும்’, ஆசிரியர், நாகர்கோவில்.

சாமுவெல் சகாரியா (1897) தென்திருவிதாங்கூர் திருச்சபை சரித்திரச் சுருக்கம் (1805– 1905) நாகர்கோவில்.

சீதாராம் குருமூர்த்தி 2008, கன்னியாகுமரி மாவட்டத் தொல்லியல் கையேடு, தொல்லியல் துறை, தமிழக அரசு, சென்னை.

சிதம்பரதாணுபிள்ளை, 1948, ‘நாஞ்சில் நாட்டு கிருஷிகர் மாநாட்டு உரையும் குறிப்புகளும்’, தோவாளை.

சிவசுப்பிரமணியம் ஆ., 2005, ‘தமிழகத்தில் அடிமை முறை’, காலச்சுவடு பதிப்பகம், நாகர்கோவில்.

சிவசுப்பிரமணியம் ஆ., 2016, அடித்தள மக்களின் வரலாறு, என் சி.பி. எச். சென்னை.

நாராயணன், 1932 ‘நாஞ்சி நாட்டு கிருஷிகர் மாநாடு’, தேரூர்

பத்மநாபபிள்ளை ஆர்., 1943 ‘ஆரைவாய்மொழி வரலாறும் மீனாட்சி சுந்தரேஸ்வரர் கோவிலும்’, ஸ்ரீ சித்திரை விலாச நூலக வெளியிடு, ஆரைவாய்மொழி.

பத்மநாபபிள்ளை ஆர்., 1944, ‘தாழைக்குடி சரிதமும் சயந்தீஸ்வரர் அழகம்மன் கோவிலும்’, ஆசிரியர், தாழைக்குடி.

பெருமாள் அ.கா., 1987, ‘தென்குமரியின் கதை’, தமிழினி சென்னை.

பெருமாள் அ.கா., 1987, ‘நாஞ்சில் நாட்டு வில்லிசைப் பாடல்கள்’, பி.எச்.டி. ஆய்வேடு மதுரை பல்கலைக்கழகம், மதுரை.

பெருமாள் அ.கா., **2001** 'கவிமணியின் வரலாற்று ஆய்வுக்கட்டுரைகள்', செண்பகா பதிப்பகம், சென்னை.

பெருமாள் அ.கா., **2006** 'முதலியார் ஆவணங்கள்', தமிழினி, சென்னை.

பெருமாள் அ.கா., **2016** 'முதலியார் ஓலைகள்', காலச்சுவடு பதிப்பகம், நாகர்கோவில்.

பேரின்ப நாயகம், **1898,** 'அடிமைகளை ஒழித்தது யார்', ஆசிரியர், மார்த்தாண்டம்.

பொன்ராஜ் வே., **2016** 'குமரிமாவட்ட சாம்பவர் வாழ்வில் கிறித்தவம்', காவ்யா, சென்னை.

ராமச்சந்திர நாடார், **1929,** 'வலங்கை நாடார்கள் வந்தேறிகளா', கொட்டாரம்.

லட்சுமணபிள்ளை, **1937,** 'ஆலயத்திறப்பு', ஆசிரியர், திருவனந்தபுரம்.

வேலப்பன் தே., **2000,** 'நாஞ்சில் நாடு', ரோகிணி ஏஜன்சி, நாகர்கோவில்.

ஜாய் ஞான தாசன், **1998,** 'ஒரு மறக்கப்பட்ட வரலாறு', இந்தியக் கல்விக் கழகம், மதுரை.

ஜார்ஜ் டி.எச்., **1987** 'குமரிமாவட்டம் பெண்ணுரிமை போராட்டம்', தேவகுமார் சாமுவெல், மார்த்தாண்டம்.

ஜான் ஜேக்கப் **1956,** 'தென் திருவிதாங்கூர் லண்டன் மிஷனரி சரித்திரம்' **(1806– 1956),** நாகர்கோவில்.

ஜெயசீல ஸ்டீபன் **1997** 'புதுவை ஆவணக் காப்பகத்தில் ஓர் அடிமை சாசனம்' (கட்டுரை) ஆவணம் **8,** தமிழகத் தொல்லியல் கழகம், தஞ்சாவூர்.

## *English*

*Agur C.M., 1903, Church History of Travancore, Thiruvanandapuram.*

*Balachandran, 1974, In Quest of Kerala Vol I, Trivandrum .*

*Chidambaram Pillai P, 1935 , Right of Temple Entry, Author, Nagerciol.*

*Gopalakrishnan, 1995, Kanyakumari Dist. Gazetters, Govt. of Tamil Nadu, Madras.*

*Joy Ganadasan 1996, A Forgottan History, Gurukal Luthern Theological College and Research Institute, Madras .*

*Kushmam K.K., 1973, Slavery in Travancore, Kerala Historical Society, Trivandrum.*

*Krishna Iyer K.V., 1966 A Short History of Kerala, Pai and Company, Ernakulam.*

*Kunjam Pillai, Elamkulam 1966 Studies in Kerala History, National Book Stall, Kottayam*

*Monikams 1982 Slavery in Tamil Country, Madras.*

*Padmanaba menon K.P. First Edi. 1927 A History of kerala vol 1 to IV Ernakulam*

*Ramachandran Adoor, 1986 Slavery in Kerala, Trivandrum.*

*Samual Matter, 1870, The Land of Charity, London.*

*Sophanan 1978, Ramavarma of Trivandrum, Calicut.*

*Yesudass R.N., 1977, John Munro in Travancore, Trivandrum .*

*Velupillai T.K., 1943, Travancore statemanual vol II Trivandrum*

# கல்வெட்டுகள்


**காசிநாதன் நடன, 1972, கன்னியாகுமரி மாவட்டக் கல்வெட்டுகள், தொகுதி** *I*

**தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை, சென்னை**

**காசிநாதன் நடன 1972 க.கு. மாவட்டக் கல்வெட்டுகள்– 2**

**காசிநாதன் நடன, 1972 க.கு. மாவட்டக் கல்வெட்டுகள் 3**

**நாகசாமி இரா 1979 க.கு. மாவட்டக் கல்வெட்டுகள் 4**

**நாகசாமி இரா 1979 க.கு. மாவட்டக் கல்வெட்டுகள் 5**

**சீதாராம் குருமூர்த்தி 2006 க.கு. மாவட்டக் கல்வெட்டுகள் 6**

**ஸ்ரீதர் தி., 2009, திருநெல்வேலி மாவட்டக் கல்வெட்டுகள் தொகுதி** *I* **தமிழ்நாடு அரசு, தொல்லியல் துறை, சென்னை**

*Gopinatha Rao T.A. 1908, Travancore Archeological Series -1 Govt of Travancore, Trivandrum.*

*Gopinatha Roa T.A. 1908 T.A.S. Vol 2 and 3*

*Subramoniya Aiyar K.V. 1923 TAS Vol 4*

*Ramanatha Ayyar AS 1924 T.A.S. Vol 5*

*Ramanatha Ayyar AS 1927 TAS Vol 6*

*Ramanatha Ayyar AS 1930 T.A.S. Vol 7*

*Vasudeva Poduval R 1938 TAS Vol 8, 9*

*Kerala Society Papers 1998 Vol I and II*

*Kerala Gazetters Thiruvanandapuram*

**இராசவேலு க(ப.ஆ.) ஆவணம் இதழ் 22 தமிழகத் தொல்லியல் கழகம், தஞ்சாவூர்.**

## கதைப்பாடல்கள்

அலுமேலு வ., 'தோட்டுக்காரி அம்மன் கதை', 1995 உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை.

ஆறுமுகப் பெருமாள் நாடார் கு., 1968 'வலங்கை நூல் என்னும் மாகாளி அம்மன்கதை', நாகர்கோவில்.

ஆறுமுகப்பெருமாள் நாடார் கு., 1979 'வலை வீசிய காவியம்' கிருஷ்ணா அச்சகம், நாகர்கோவில்.

ஆறுமுகப் பெருமாள் நாடார் கு., 1977 'பூலங்கொண்டாளம்மன் கதை', நாகர்கோவில்.

சர்வேஸ்வரன், 1982 'ஓட்டன்கதை', மனோ வெளியீடு, மதுரை.

தங்கதுரை சு., 1983 சிதம்பரநாடார் கதை சோபிதம், நாகர்கோவில்.

. . . . வலங்கை வாழ்த்து, 1956, தென்காசி.

நடராசன், 1980 பத்திரகாளி அம்மன் கதை, சண்முகா வெளியீடு மதுரை.

லாரன்ஸ் நாயகம் ச., 1977 வன்னிராசன் கதை, கிருஷ்ணா அச்சு கூடம், நாகர்கோவில்

# கையெழுத்துப் பிரதிகள்/ஏடுகள்

எட்டுக்கூட்டத் தம்புரான் கதை (ஏடு)

கட்டிலவதானம் (ஏடு)

காணி சாவு (கை. எ. பி.)

சின்னநாடான் கதை (ஏடு)

மணிச்சாம்பான் கதை (ஏடு)

முண்டன் கதை (ஏடு)

ஆந்திரமுடையார் கதை (ஏடு)

குமாரசாமி கதை (ஏடு)

காணி சாவு (ஏடு)

சேர்வைக்காரன் கும்மி (ஏடு)

பிச்சைக்காலன் கதை (கை. எ. பி)

புலமாடன் கதை (ஏடு)

வலிய எஜமான் கதை (கை. எ. பி)

வள்ளியம்மன் கதை (ஏடு)

கவிமணியின் கையெழுத்துப் பிரதி

பத்மநாபபிள்ளை கையெழுத்துப் பிரதி

சுப்பிரமணிய பிள்ளை (முன் எம்.எல்.ஏ) வீட்டு ஏட்டுப் பிரதி

*O.* சித்திரபுத்திர பிள்ளை வீட்டு கை. எ. பி.